KALKI 6.1.2008
ரூ.8.00 80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



## புவியீர்ப்பு விசையைத் தாண்டி...

-வெ. இறையன்பு
தன்னம்பிக்கைக் கட்டுரை




## இளமைக்கு






ஆயுர்வேதம்
ஆரோக்கியத்தின் உரைகல்

**Team Eubio Care** (Division of CAL)

வழங்கும்

# ஒற்றை மூலிகை நிவாரணம்

**பாரம்பரிய ஆயுர்வேதத்தின் அடிப்படையில்.**

பாரம்பரிய ஆயுர்வேதத்தின் அடிப்படையில்
தற்கால ஆராய்ச்சிகளையும் மேற்கொண்டு,
Team Eubio Care வழங்கும் ஒற்றை மூலிகை நிவாரணம்.
காப்ஸ்யூல்களாக !



**ஆம்லாகி | குகுளு | அர்ஜினா**
**பில்வா | குடுச்சி | ஷள்ளாகி**

To be used as directed by the Physician

AVAILABLE ONLY AT

**Team Health Shoppe** For Wellness

OPEN ON ALL DAYS

வண்டலூர்: டீம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. ரோடு, (Vandalur Zoo அருகில்) Ph: 2275 0502 / அண்ணாநகர்: பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, சென்னை - 40. (லேபர் ஆபிஸர்ஸ் குவார்ட்டர்ஸ் அருகில்) Ph: 4269 3332 / இந்திரா நகர்: 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், சென்னை - 20. Ph: 4269 5115 / புரசைவாக்கம்: எண்.23B, பேஸ்மெண்ட், பிரின்ஸ் டவர்ஸ், (அபிராமி மெகாமால் எதிரில்) புரசைவாக்கம் ஹை ரோடு, சென்னை - 10. Ph: 4542 8898 / தி.நகர்: பு.எண். 2, ப.எண். 60, லலி கிருஷ்ணா அபார்ட்மெண்ட், கிரி ரோடு, தி.நகர் (பாரதிராஜா மருத்துவமனை பின்புறம், ஜி.என்.செட்டி ரோடு அருகில்), சென்னை - 17. Ph: 4269 4849.




பொன்பூமியில் விளையும்
தங்க நெக்லஸ் அனைத்தும் பொக்கிஷம்



தி சென்னை சில்க்ஸ்
ஜுவல்லரி மஹால்

இந்தியாவின் தன்னிகரற்ற தங்கமாளிகை

தி.நகர், சென்னை - 17. Ph : 044-24330888

Shop online at www.ktmjewellery.com

# மார்கழி காலை




மார்கழி மாதத்துக்கேற்ற காலை நேரக் காட்சிபோல அமைந்திருக்கிறது ஸ்ரீமீடியாவின் 'விஸ்வரூப தரிசனம்'வி.சி.டி.

எஸ்.பி.பாலசுப்பிரமணியம், சித்ரா (சின்னக்குயில் சித்ரா அல்ல!), வீரமணி கண்ணன் ஆகியோர் பாடிய பாடல்களின் பின்னணியில் ஏழுமலையானின் கதையைச் சொல்கிறார் டெல்லி கணேஷ். (அவருக்குப் பின்னணிக் குரலிசைதான் எஸ்.பி.பி.)

ஏழு தலைகள் கொண்ட சர்ப்பம் படமெடுத்துப் படுத்திருப்பதுபோல் அமைந்திருக்கிறதாம் ஏழுமலையான் உறையும் மலைப்பகுதி. காளஹஸ்தியும், அஹோபிலமும், ஸ்ரீசைலமும் சர்ப்பத்தின் ஒவ்வோர் அங்கத்தையும் குறிக்கிறதாம். 'புத்தகங்கள் மூலமும், புராணங்கள் வாயிலாகவும், பெரியோர்களிடமிருந்தும் அறிந்துகொண்ட அந்தத் திருத்தலத்தின் பெருமையை டெல்லி கணேஷ் சொல்கிறார். இடையிடையே பாடல்கள். அதற்கெல்லாம் பின்னணியாகத் திருமலையின் அழகு கொஞ்சும் பச்சைப் பசேல் மலையும், மரங்களும், மலர்களும். திருமஞ்சனம், பிரம்மோற்சவம், லட்சுமி கல்யாணம் என்று பக்தர்களின் பசிக்குத் தகுந்த தீனியாக அமைந்திருக்கிறது இந்த வி.சி.டி.

இசை ஓகோ என்று இல்லாவிட்டாலும், பக்தி இசை என்ற கோணத்தில் பார்க்கையில், காட்சிகளுக்கு இடைஞ்சல் இல்லாமல் இருப்பதே பெரிதல்லவா?

ஏழுமலையானின் பக்தர்களுக்கு மட்டுமின்றி, வீடுகளில் சிறப்பு நிகழ்வுகளின் போது கூடும் நண்பர்களை, சுமார் ஒரு மணி நேரம் போல ஓர் இடத்தில் கட்டிப்போட, கை வசம் இந்த வி.சி.டியை வைத்துக் கொள்ளலாம்!

ஸ்ரீ மீடியா சொல்யூஷன்ஸ் தயாரிப்பு. சுருதிலயா (87, சி.பி.ராமசாமி சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018)



வெளியீடு. விலை ரூ.65/-

# புத்துணர்ச்சி!

இப்போது நடனக் கலைஞர்களின் நாட்டியம் வி.சி.டி வடிவில் வரத் தொடங்கி இருக்கிறது!

நடனக் கலைஞர் சுதாராணி ரகுபதியின் அபிநயம் வெளிப்பட திவ்யப்பிரபந்த பாடலான 'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு' தொடங்கி, ஒரு ஜாவளியில் முடியும் இந்த வி.சி.டிக்கு மறைந்த இசைக் கலைஞர் மதுரை என்.கிருஷ்ணன் இசை அமைத்திருக்கிறார்.

கல்யாணி ராகத்தில் 'தந்தை மொழியாள்', சங்கராபரணத்தில் 'எவ்வடே ஓ பாமா' என்ற பதம், மகாகவி பாரதியாரின் ஜோன்புரி ராக 'ஆசை முகம் மறந்து போச்சே', பெஹாக் ராக ஜாவளி 'கேலியாய்ப் போனதடி' என்று கொஞ்சம் ரிலாக்ஸ்ட் ஆக உட்கார்ந்து, (நொறுக்குத் தீனியோடு!) ரசித்துக் கேட்டுக் கொண்டே ஒரு மாலைப் பொழுதைக் கழிக்க இந்த வி.சி.டி உதவும்.

நிருத்தியத்துக்கு இடம் கொடுக்காமல், அபிநயத்துக்கே முக்கியத்துவம் கொடுத்து நடனமாடியிருக்கிறார் சுதாராணி. இசைக் குழுவோடு மேடையில் படமாக்கி இருப்பதால், நேரில் பார்க்கிற அனுபவம் கிடைக்கிறது. நந்தினி ஆனந்தின் குரலும், விஜயராகவனின் வயலினும், அனிருத்தின் மிருதங்கமும் இதமாக இழைந்திருக்கின்றன.

நடனக் கலை ரசிகர்களுக்கு, சூப்பர் ஆடியோ தரும் இந்த வி.சி.டியின் விலை ரூ.350/- (அம்மாடியோவ்!)

*ஸ்ரீ மீடியா சொல்யூஷன்ஸ்,*
*எண்-8, 2வது குறுக்குத் தெரு,*
*முகப்பேர் மேற்கு, சென்னை-95*

– சாருகேசி




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

*ஆசிரியர் :*
**சீதா ரவி**

*தலைமை உதவி ஆசிரியர் :*
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# இளமைக்கு மாறுங்கள்...



* தம் மகள்களுடன் சித்ரா ரவி

"குழந்தைக்கு ஜுரம். டாக்டர் ஊசி போடவேண்டும் என்கிறார். ஊசி போட்டால் குழந்தைக்கு வலிக்கும். எனவே, ஊசியெல்லாம் வேண்டாம். ஜுரம் இருந்துவிட்டுப் போகட்டும்" என்று சொல்வோமோ? குழந்தையிடம் ஊசி போட வேண்டியதின் அவசியத்தை விளக்கிச் சொல்லிப் பொறுத்துக்கொள்ளத்தானே செய்வோம். இது பெரியவர்களின் வாழ்க்கைக்கும் பொருந்தும். நாம் அன்றாட வாழ்க்கையில் சந்திக்கும் சிறுசிறு பிரச்னைகள் அனைத்துமே, வாழ்க்கையில் நாம் பெரிய பாடங்களைக் கற்றுக்கொள்வதற்காக இறைவன் ஏற்படுத்தித் தருகிற வாய்ப்புகள் என்றுதான் எடுத்துக் கொள்ள வேண்டும்" என்கிறார் சித்ரா ரவி. குழந்தைகளுக்காகக் கணிதம், அறிவியல் போன்ற பாடங்களை அவர்கள் விரும்பும் வகையில் மல்டி மீடியாவில் உருவாக்கித் தரும் நிறுவனத்தை நடத்துவதுடன், பல்வேறு நிறுவனங்களில் பணியாற்றுபவர்களுக்கு, மனிதவள மேம்பாட்டுப் பயிற்சியளிக்கும் வகுப்புகளையும் நடத்தி வருகிறார். நாள் முழுவதும் புத்துணர்ச்சியோடு இருப்பதற்கு நமக்கும் டிப்ஸ் தந்தார்...

"வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டியான எம்.எஸ்.ஸின் 'குறையொன்றுமில்லை'யைத் தாண்டி வேறு ஒன்று இருக்கமுடியாது. எதை எடுத்தாலும் எதிர்மறையான கண்ணோட்டத்துடன் பார்ப்பதற்கு குட்பை சொல்லிவிட்டு, எல்லாவற்றையும் பாசிடிவ் அணுகுமுறையுடன் நோக்குங்கள். நாள் முழுவதும் புத்துணர்ச்சி பொங்கும்.

என்னையே எடுத்துக்கொண்டால், என் கணவர் தனியாக இன்டீரியர் டிசைனிங் கன்சல்டன்சி நடத்துகிறார். நான் குழந்தைகளுக்கான மல்டி மீடியா தயாரிக்கும் நிறுவனம் நடத்துகிறேன். தவிர, பல்வேறு நிறுவனங்களுக்கும் சென்று பயிற்சி வகுப்புகள் வேறு நடத்துகிறேன். நிறைய வெளியூர்ப் பயணம் செல்ல வேண்டி இருக்கிறது. எங்களுக்கு இரண்டு பெண்கள். அவர்களுக்கு வீட்டை கவனிக்கும் வெறும் அம்மாவாக மட்டுமில்லாமல், சிநேகிதியாக, வழிகாட்டியாகவும் இருக்க வேண்டி இருக்கிறது. எனக்குத் தேவையான சக்தியை அளிப்பது, நான் தினமும் காலையில் செலவழிக்கும் முக்கால் மணி

நேரம்தான். அப்போது மனத்தை ஒருமுகப் படுத்தி, உடலின் ஒவ்வொரு பகுதியாகக் கவனம் செலுத்திச் செய்கிற தியானம், எது குறித்தும் தெளிவாக சிந்திக்க பெருமள வுக்கு உதவியாக இருக்கிறது.

நம்மிடம் என்னவெல்லாம் இருக்கிறது என்று ஆராய்ந்து பார்த்து, அவற்றுக்காக மகிழ்ச்சிகொள்ளும் மனப்பக்குதவத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும். அதேசம யம், நம்மிடம் இல்லாதவற்றுக்காகக் கவ லைப்பட்டுக் கொண்டிருக்காமல், அந்தத் திறமையோ, குணமோ நமக்கு அவசியம் என்று கருதினால், அவற்றை எப்படி வளர்த்துக் கொள்வது என்று பார்ப்பது நல்லது. அதுவே நம்மை இளமையாக மாற்றும்.

இன்னொரு முக்கியமான விஷயம் - அந்தக் கணத்தில் வாழ்வது. நடந்து முடிந் தது பற்றியோ, நாளை என்ன நடக்கும் என்பது பற்றியோ வீணாகக் கவலைப் பட்டு என்ன சாதிக்கப் போகிறோம்? அதேநேரத்தில் நம் வாழ்க்கையை, நாம் செய்யவேண்டிய வேலைகளை எப்படிச் செய்யவேண்டும் என்று திட்டமிட்டுக் கொள்வதும் மிகவும் அவசியமானது.

ஆண்டொன்று போனால், வய தொன்று கூடும் என்பார்கள். ஆனால், நாட்கள் நகர, நகர நமக்கு வயது மட்டும் கூடுகிறதா, என்பது மிக முக்கியம்.

ஒருவருக்கு வெறுமனே வயது கூடிக் கொண்டே போவதால், அவரது வாழ்க் கைக்கு அர்த்தமில்லாமலேயே போய்விடக் கூடும். வாழ்க்கையில் அவருக்கு ஏற்படும் அனுபவங்கள் அவரை எந்த அளவுக்குப் பக்குவப்படுத்துகின்றன. எனக்கு இப் போது நாற்பது வயதான போதிலும்கூட, தினமும் காலையில் எழுந்தவுடன் புதிதாக ஒரு தினத்தை எனக்காக கடவுள் அளித் திருக்கிறார் என்று மலர்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன். எனக்காக வாழ்க்கையில் இன்னும் ஏராளமான சுவாரஸ்யமான நாட் கள் காத்துக் கொண்டிருப்பதாக நினைக் கிறேன். நம் சமூகத்தில் வயதாகிவிட்டால், இதெல்லாம் மட்டும்தான் செய்யலாம்; இவற்றைப் பெரியவர் கள் செய்வதா என்கிற மனோபாவம் வந்துவிடு கிறது. இது பெற்றோர் களுக்கும் குழந்தைகளுக் கும் இடையிலான இடை வெளியை அதிகரிக்கிறது.




அவ்வப்போது ஏதாவது புதிதாக கற்றுக்கொள்வது நம்மை இளமையாக மாற்றும். வாழ்க்கையில் சுவாரஸ்யம் அதிகமாகும். என் பெண்கள் பாட்டுக் கற்றுக்கொண்டபோது நானும் கர்நாடக இசை மட்டுமில்லாது, ஹிந்துஸ்தானி இசையும் கற்றுக்கொண்டேன்.

சலிப்பு வந்துவிட்டால், வாழ்க்கையில் பிடிப்பு இருக்காது; மனம் சோர்ந்து போய் விடும். எனவே, தினமும் ஒரே மாதிரியான வேலையைச் செய்யவேண்டிய சூழ்நிலை யில் இருப்பவர்கள். தங்கள் வேலையில் எப்படிச் சுவாரஸ்யங்கள் ஏற்படுத்திக் கொள்ள முடியும் என்று யோசிக்க வேண்டும்.

வழக்கமாக வலது கையால் செய்யும் வேலைகளில் சிலவற்றை இடது கையால் செய்துபாருங்களேன். ஒரு சுவாரஸ்யம் ஏற்படும் என்ப தோடு மூளையின் வலது பக்கத்தைப் போலவே, இடது பக்கத்தையும் இயக்க வைக் கலாம். இது அறி வியல்பூர்வமான உண்மை! அப்புற மென்ன, புத் துணர்ச்சிதான்!'' என்கிறார் சித்ரா ரவி.




- எஸ்.சந்திரமௌலி

அட்டை மற்றும் படங்கள் : ஸ்ரீஹரி



* நட்சத்திர நாயகனுடன்!

● இரா.சக்கரபாணி, மதுரை

? ''குஜராத் முதல்வர் நரேந்திர மோடியை மட்டும் மரண வியாபாரி என்று கூறவில்லை. ஒட்டு மொத்த அரசியல்வாதிகள் பற்றிய விமர்சனம் அது'' என்று தேர்தல் ஆணையத்திடம் காங்கிரஸ் தலைவர் சோனியா விளக்கம் அளித்திருப்பது பற்றி...?

! உளறியதற்கான விளக்கம் அதைவிடப் பெரிய உளறலாய் இருக்கே! தேர்தல் ஆணையம் கண்டனம் தெரிவித்ததில் வியப்பில்லை.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? நாம் யார் யாரைக் கோட்டைக்கு அனுப்புகிறோமோ அவர்கள் நமக்கு எதிரிகளாகிறார்கள். நாமே 2011-ல் கோட்டைக்குப் போவோம் என்கிறாரே ராமதாஸ்... சாத்தியமா?

! அரசியலில் எதுவும் சாத்தியப்படலாம். ஆனால் ஒன்று, யார் கோட்டைக்குப் போனாலும், அவர்களை அங்கே அனுப்பிய மக்கள் எப்போதும் குடிசையிலேதான் இருக்கவேண்டும் - அது மட்டும் மாறவே மாறாது!

● எம்.ராஜேந்திரன், லால்குடி

? உலகிலேயே மிகச் சிறந்து விளங்குவோர் இந்திய மருத்துவர்கள்தான் என்று அன்புமணி புகழ்ந்திருக்கிறாரே?

! அறிவாற்றலில் சிறந்து விளங்குவதோடு, நேர்மையிலும் பண்பாட்டிலும் கடமை உணர்விலும் சிறந்தால்தான் அன்புமணி கூறுவதைத் தயக்கமின்றி ஏற்கமுடியும்.

● சங்கரன், தஞ்சாவூர்

? ஸ்டாலினும் அழகிரியும் கடிகார முட்கள் போல் இணைந்து செயல்பட

* கோட்டைக் கனவு!



* கடிவாளக் குதிரை!

# இந்திய மருத்துவர்கள் உலகிலேயே சிறந்தவர்களாமே..?


* ஒட்டுமொத்த உளறல்!

வேண்டும் என்று கவிஞர் வைரமுத்து கூறியுள்ளது பற்றி..?

! அது சரிதான்; ஆனால், சின்ன முள் யார்? பெரிய முள் யார்? என்பதுதானே பிரச்னை! அது தீர்ந்த பிறகல்லவா ஒத்துழைப்பு.

● அ.பேச்சியப்பன், ராஜபாளையம்

? பிரசவத்துக்கு இலவசம் என்ற வாசகத்தை இப்போதெல்லாம் ஆட்டோக்களில் பார்க்க முடிவதில்லையே?

! இலவச விஷயத்தை ஒட்டுமொத்தமாக அரசியல் கட்சிகள், தேர்தல் வாக்குறுதிகளுக்குக் குத்தகை எடுத்துவிட்டதால் இருக்கும்.

● ஜெ.ரஞ்சிதமணி, கோவை

? ''ராகுல்காந்தி பிரதமரானால் இந்தியாவுக்கு ராகு காலம்'' என்று பா.ஜ.கவினர் கூறுவது பற்றி?

! இது பா.ஜ.க. பிராண்ட் மலினமான தாக்குதல். காந்தி என்ற பெயர் அடுத்து வருவதால், இருளை நீக்கி ஒளிரச் செய்பவன் என்றும் அர்த்தம் பண்ணிக்கொள்ளலாமே!


* உலகப் புகழ்!

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

? தமது நாய்க்குட்டியுடன் நட்சத்திர ஹோட்டலில் தங்க, பண்டிட் ரவிசங்கருக்கு அனுமதி மறுக்கப்பட்டது பற்றி...?

! ஹோட்டல்கள் நம் வீடு அல்ல. அவர்களுடைய நிர்வாக வசதிக்கேற்பத்தான் தங்குபவர்கள் வளைந்து கொடுக்க வேண்டும். இதை உணர்ந்தால் ரவிசங்கர், பண்டிட்.

● கு.கணேசன், பனங்கோட்டூர்

? 'விடுதலைப் புலிகளுக்கு ஆயுதம் கடத்துவது பெருமைக்குரிய விஷயம்' என்கிறாரே திருமாவளவன்?

! இப்படியெல்லாம் பேசுவது தேசத் துரோகம் என்றால், இதையெல்லாம் கேட்டுக்கொண்டு ஒரு முதல்வர் கண்டனம்கூடத் தெரிவிக்காமல் இருப்பது அதைவிடப் பெரிய துரோகம்.

● வெ.ராம்குமார், வேலூர்

? ''பாட்டாளி மக்கள் கட்சி எப்போதுமே சமரசம் செய்துகொள்ளும் கட்சி


* உறுத்தும் முள்!



★ எம்.ஃபில் ஏடுகளில்..!

கிடையாது'' என்று ராமதாஸ் பேட்டி அளித்துள்ளது குறித்து..?

! கொள்கை முரண்பாடு உள்ள கட்சிகளுடன், தேர்தல் கூட்டணி அமைப்பதே ஒரு சமரசம்தானே டாக்டர்!

● ரேவதிப்ரியன், ஈரோடு

? இசையை, பள்ளிகளில் கட்டாயப் பாடமாக்க வேண்டும் என்கிறாரே ராமதாஸ்?

! இசையையும் விளையாட்டையும் கட்டாயப் பாடமாக்கி வெறுப்பை வளர்ப்பதைவிட, களிப்பூட்டும் பாடங்களாக்கி விருப்பத்தை வளர்ப்பது நல்லது. இதற்காக ஒதுக்கப்படும் நேரம், பரீட்சைகள் நெருங்க, இதரப் பாடங்களுக்காகக் கபளீகரம் செய்யப்படக் கூடாது. பரீட்சை நெருக்கத்தில்தான் இவற்றின் தேவை அதிகம்.

● ஜி.எஸ்.ராஜன், சென்னை-42 ❒

? தேனி மாவட்டத்தில் வருசநாடு அருகே பதுங்கியிருந்த ஐந்து தீவிரவாதிகள் நக்ஸலைட்டுகள் என்று அறிய அதிர்ச்சியாக உள்ளதே?

! தேசிய பாதுகாப்பு ஆலோசகர் நாராயணன், நமது முதல்வரைச் சந்தித்துவிட்டு, 'தமிழ் நாட்டில் நக்ஸலைட்டுகள் நடமாட்டமே இல்லை' என்று கூறிவிட்டுச் சென்ற மறுநாளே இந்தச் செய்தி வந்தது கூடுதல் அதிர்ச்சி. அவர்கள் சட்டீஸ்கரில் பயிற்சி அளிக்கப்பட்டவர்கள்; தேனி பகுதியின் வனப் பிரதேசங்களைக் கைப்பற்றி, தங்கள் 'ஆட்சியை' நிறுவத் திட்டமிட்டிருந்தனர் என்பது அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி!

● என்.சீதாலட்சுமி, பொள்ளாச்சி ★

? எம்.ஃபில் ஆய்வுக் கட்டுரையாக, 'தமிழ்த் திரைப்படங்களில் நடிகை சில்க்கின் தாக்கம்' என்ற தலைப்பில் சமர்ப்பிக்கப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டி உயர்கல்வி துணைத்தலைவர் வருத்தப் படுவது சரியா?

! அதனை மேற்கொள்ள ஆசிரியர்கள் ஏன் அனுமதித்தார்கள் என்பதைப் பார்ப்பதுடன், எத்துறையில் அப்படியொரு ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டது என்பதையும் கவனிக்கவேண்டும். திரைப்படத் துறை படிப்பு எனில் முற்றிலும் நியாயமானதே!

● என்.சண்முகம், சேலம்-1

? சீக்கிரம் செல்ல வேண்டும் என்பதற்காக மூடப்பட்ட ரயில்வே கேட்டைத் திறக்கச் செய்து, பள்ளிக்கூட பஸ் - ரயில் மோதல் நடந்து, பதினெட்டுப் பேர் பலியானது பற்றி...?

! சட்டத்தையும் விதிமுறைகளையும் ஆணவத்துடன் மீறக் கூடாது என்ற கட்டுப்பாடு என்று தலைவர்களுக்கு உருவாகிறதோ, அன்றுதான் மக்களுக்கும் அந்தப் பொறுப்புணர்வு வரும். அன்றுவரை, இப்படிப்பட்ட பல சோகங்களைச் சந்திக்க வேண்டியதுதான்.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? மத்திய அரசின் திட்டங்களுக்காக மாநில அரசுகளிடம் நிதி கேட்கக் கூடாது என்கிறாரே கருணாநிதி?

! ஆனால், மத்திய அரசு மட்டும் வாரி வாரி மாநில அரசுக்குக் கொடுக்கணும்! குதிரை, கொள்ளுக்கு வாயைத் திறந்து கடிவாளத்துக்கு வாயை மூடிக்கொள்கிற கதைதான்!

| ❒ ரூ.100/- பரிசு பெறுபவர்: |
|---|
| ஜி.எஸ்.ராஜன், சென்னை - 42 |
| ★ ரூ.50/- பரிசு பெறுபவர்: |
| என். சீதாலெட்சுமி, பொள்ளாச்சி |



"படத்தில் வரும் சம்பவங்கள் யாரையும் குறிப்பிடுவன அல்ல'' என்று அறிவிப்பு செய்தாலும், தர்மபுரி சம்பவம்தானே உங்களை 'கல்லூரி' படம் எடுக்கத் தூண்டியது?''- கல்லூரி படத்தின் டைரக்டர் பாலாஜி சக்திவேலிடம் கேட்டபோது, ''தர்மபுரி சம்பவத்தைவிட, அது தொடர்புடைய இன்னொரு சம்பவம்தான் அதற்குக் காரணம்.''

''அது என்ன புது சம்பவம்?''

''தர்மபுரி கோரச் சம்பவத்துக்குப் பிறகு பலியான மாணவிகளின் நண்பர்கள், உறவினர்கள் ஆண்டுதோறும் சம்பவம் நடந்த இடத்துக்கு வந்து அஞ்சலி செலுத்தும் புகைப்படத்தைப் பத்திரிகைகளில் பார்த்தபோதுதான், எனக்கு 'கல்லூரி' படத்தை எடுக்கும் எண்ணம் உருவானது'' என்கிறார் பாலாஜி சக்திவேல்.

''படம் முழுக்க, திரைக்குத் துளியும் பரிச்சயமில்லாத புதுமுகங்கள்! அதனாலேயே ஒரு புத்துணர்ச்சியைப் பார்க்க முடிகிறது! அது எப்படிச் சாத்தியமாயிற்று?''

''நீங்களே அவர்களுடன் பேசிப் பாருங்களேன்!'' என்று பாலாஜி சக்திவேல் சிலரை அறிமுகப் படுத்தினார்.

''இவர் கோபால்.''

''உங்களைப் பத்திச் சொல்லுங்க'' என்று நாம் சொன்னவுடன், அவர் பக்கத்தில் அமர்ந்திருக்கும் வினோத்தைப் பார்த்து, ''கேக்குறாருல்ல... சொல்லுங்க...'' என்று புருவங்களை உயர்த்த, நாம் பதற்றத்துடன்,

''ஐயோ சாமி! ஆளை விடுங்க! உங்க காமெடியைப் படத்தோடு நிறுத்திக்கிட்டு, விவரத்தைச் சொல்லுங்க'' என்றதும், கல்லூரி இரட்டையர்களே சிரித்துவிட்டனர்.

''கோபால், வினோத் இருவரும் சென்னை குருநானக் கல்லூரி மாணவர்கள். தேசிய அளவிலான போட்டிகளில் கலந்துகொண்ட அனுபவசாலிகள். குருநானக் கல்லூரியில் ஆங்கில ஆசிரியராகப் பணியாற்றும் திருமதி பாலாஜி சக்திவேல் சொல்லி அனுப்ப, அவர்கள் திறமையைப் பார்த்து அசந்து போனேன். அதனால்தான் அவர்களுக்கு வாய்ப்பளித்தேன்.

'பரணி' என்ற நிஜப்பெயர் கொண்ட ரமேஷுக்குச் சிறுவயது முதலே நடிக்க ஆர்வம். காமாட்சி, பதினாறு வயதில் சினிமாவில் நடிக்கும் ஆர்வத்தில் சென்னைக்கு வந்தவர்.

ஹேமலதா என்ற இயற்பெயர் கொண்ட கயல்விழி, ஒரு ஜூனியர் ஆர்ட்டிஸ்ட். துடுக்குத்தனமாய்ப் பேசும் கேரக்டருக்குப் பொருத்தமானவர் என்று இவரைப் பிடித்துப் போட்டோம்.

கிராமத்து முகங்கள்தான் வேண்டும் என்பதால், பொருத்தமான முகங்களைத் தேடிப்பிடித்து நடிக்க வைத்திருக்கிறோம்.





இவர்களுடன் சற்றும் தொடர்பில்லாத அப்பாவியான, அழகான பெண் வேண்டும் என்று தமனாவை ஷோபனா வாக்கினோம்'' என்கிறார் பாலாஜி சக்திவேல்.

''நான் ஓர் அத்லெட்! கிரவுண்டில் பயிற்சி செய்துகொண்டிருந்தபோது, தூர இருந்து ஹாண்டி கேமராவில் என்னைப் படம்பிடித்தது எனக்கே தெரியாது. திடீரென என்னிடம் வந்து 'சினிமாவில் நடிக்க விருப்பமா?' என்றபோது எனக்கு நம்பவே முடியலை!'' என்கிறார் திண்டுக்கல்லைச் சேர்ந்த அகில். ப்ளஸ் டூ முடித்தவருக்கு சினிமா வாய்ப்பு வரவே, கல்லூரிக்குப் போகாமலே, 'கல்லூரி' ஷூட்டிங்குக்கு வந்துவிட்டார்!

படத்தில் ஹீரோ முத்துவின் தங்கையாக வரும் சிறுமிகூட உண்மையில் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த சிறுமிதான். ''எங்க அம்மா செத்துப் போச்சு!'' என்று சொல்லிக் கண் கலங்கும்படி அந்தச் சிறுமியிடம் சொன்னோம். தத்ரூபமாய்ச் செய்து காட்டினாள். ''நல்லா நடிச்சே!'' என்று தட்டிக் கொடுத்தபோது, ''என் அம்மா நெஜமாலுமே போன வருசம் செத்துப் போச்சு'' என்று அந்தச் சிறுமி கண் கலங்கிச் சொன்னபோது, நானே கண் கலங்கினேன்'' என்கிறார் இயக்குனர்.




''பள்ளிக்கூடத்தில் படித்துவிட்டு, ஒரே செட்டாக கல்லூரிக்கு வருபவர்களின் விகல்பமில்லாத, போலித்தனமில்லாத நட்பு, படத்திலும் சரியானபடி வெளிப்படவேண்டும் என்பதற்காக, அத்தனை பேரையும் எங்கள் ஆபீசுக்கு வரச் சொல்லி, பேச வைத்து அவர்களுக்குத் தெரியாமல் வீடியோ எடுத்தோம். அவற்றையெல்லாம் இவர்களுக்குப் போட்டுக் காட்டினோம். ஆகவே, அனைவருக்குள்ளும் நிஜமாகவே நல்ல நட்பு ஏற்பட்டுப் பழகியது படத்துக்கு மிகவும் பயன்பட்டது.

'ஆரம்பத்தில் ஓரிரு நண்பர்கள், முழுக்க முழுக்க கேமரா அறிமுகம் இல்லாதவர்களைப் போட்டு எடுப்பது ரிஸ்க் இல்லையா?' என்று என்னைப் பயமுறுத்தினார்கள். ஆனால், நான், 'எனக்குக் கதை மீது ஆழமான நம்பிக்கை இருக்கிறது. அதற்கு இப்படிப்பட்ட முகங்கள்தான் தேவை! பிரபலமான, அழகான முகங்களை இந்தக் கேரக்டர்களில் நடிக்க வைத்தால், படம் எடுபடாது!' என்று நம்பிக்கையுடன் பதில் சொன்னேன். என் நம்பிக்கைக்குத் தங்கள் கைத்தட்டலையே விருதாகக் கொடுத்துவிட்டார்கள் தமிழ் ரசிகர்கள்!'' என்று சந்தோஷப்படுகிறார் பாலாஜி சக்திவேல்!

– எஸ். சந்திரமௌலி





# மின்னல் கதைகள்!

தங்கராசு, அலுவலகக் கேன்டீனிலிருந்து திரும்பிக்கொண்டிருந்தபோது, அவன் மேலதிகாரி கண்ணபிரான் எதிரில் வந்தார். கையை உயர்த்தி 'வணக்கம்' என்றான். கண்ணபிரான் சிரித்துவிட்டுச் சென்றுவிட்டார். தங்கராசுவுக்கு கோபமும் அவமானமுமாக இருந்தது. 'என்ன மனிதர் இவர்? பதிலுக்கு வணக்கம் சொல்லும் நாகரிகம்கூட தெரியாதவரா? விஷ் பண்ணுவதென்பது நட்பாக, ஆரோக்கியமாக இல்லாமல், அதிகாரத் தோரணையை வெளிப்படுத்தும் அடையாளமாக இருக்கிறதே' என்று எண்ணினான். மறுநாளே, மீண்டும் இதே போல சந்திக்க நேர்ந்தது. கண்ணபிரான் பார்த்ததும் சிரித்து வைத்தான். அவர் கையை அரைகுறையாக உயர்த்தி 'விஷ்' பண்ணிவிட்டார். தங்கராசுவோ சிரித்துக்கொண்டே நகர்ந்தான். கண்ணபிரான் கோபத்தோடு கேட்டே விட்டார். ''என்ன நானே விஷ் பண்றேன்? நீ பாட்டுக்குப் போயிட்டிருக்கே?''

''நான் விஷ் பண்ணாக்கூட நீங்க விஷ் பண்றதில்ல. ஒருவேளை, இதெல்லாம் உங்களுக்குப் பிடிக்கலையோன்னு நினைச்சேன் சார்!'' என்றான். அதெப்படி நான் விஷ் பண்ண பிறகு நீ விஷ் பண்ண வேண்டியதுதானே'' என்றார் கடுப்பாக. சிரித்த தங்கராசு சற்று அமைதிக்குப் பின், ''அந்த வலி என்னன்னு உங்களுக்கும் தெரியட்டும்னுதான் சார் அப்படிச் செஞ்சேன். மன்னிச்சுடுங்க''

**- ச.முத்துவேல்**

''எதுக்குடா! பத்து வருஷமா நீ கஷ்டப்பட்டு எழுதிய படைப்புகளை எல்லாம் கொளுத்திட்டு இருக்கறே? பாபு கேட்கவும்,

''பத்து வருஷமா என் வாழ்க்கையில எந்தவித முன்னேற்றமுமில்லை. இதுக்கு நான் படைப்பாளியாயிருக்க விரும்பலைடா. கலையுலகில் படைப்பாளி அந்தஸ்தும் கிடைக்கலை. எல்லாத்துக்கும் மேல, நான் நேசிக்கற மாபெரும் எழுத்தாளர் நேசனுக்கு உதவியாளரா சேர, விளம்பரம் வந்ததுன்னு விண்ணப்பிச்சேன். மூணு மாசமாச்சு; பதிலே இல்லை. வெறுத்துப் போச்சுடா! இனி எழுதி முன்னேற முடியாது. நான் சராசரி மனுஷனா வாழ முடிவு பண்ணிட்டேன்டா! அதுக்கு என் படைப்புகள் தடையாயிருக்கக்கூடாது. அதனால எரிச்சுட்டேன்'' என்றான் கலை (எ) கலையரசன்.

''அப்போது போஸ்ட்மேன் குரல் கேட்கவே. தபாலை வாங்கிப் பிரித்து படித்தவன் அதிர்ந்தான். அதில்..

''என்னிடம் உதவியாளராய் சேரவும், உங்கள் திறமையை நான் அறிந்து கொள்ளவும் உங்கள் படைப்புகளுடன் வரவும்.''

இப்படிக்கு நேசன்.

கலை, திரும்பிப் பார்க்க படைப்பு அனைத்தும் எரிந்து சாம்பலாகியிருந்தது.

**- வெ.ராம்குமார்**








அடுத்த இதழ்

# மகிழ்ச்சி பொங்கும் பொங்கல் சிறப்பிதழ்!

## ஆரம்பம்...



ஆர்.முத்துக்குமார் எழுதும்

**கலகம் பிறந்தது எனக்காக!**

சர்ச்சைக்குரிய பிரபலங்களின் உள்ளும் புறமும் அலசும் தொடர்!



படுதலம் சுகுமாரன் எழுதும்

**கோலங்கள்... புள்ளிகள்!**

ஓரே பக்க தொடர் கதை!

**ப்ரிஸ்கிரிப்ஷன்**

வாசகர்களின் சந்தேகங்களும்... மருத்துவ நிபுணர்களின் பதில்களும்!



கலர்ஃபுல் கலவையாய் கேமரா கதைகள் அதிரடி ஆரம்பம்...



# கல்கி



2008 ஜனவரி 6
சர்வஜித் மார்கழி 21
மலர் : 66
இதழ் : 23

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- *பாரதியார்*

## மோடியின் வெற்றி வாக்குறுதிகள்

**மோ**டியின் வெற்றி என்றே பா.ஜ.க.வின் குஜராத் வெற்றி கொண்டாடப்படுகிற நேரத்தில், அவ்வெற்றிக்கு 'அடிமட்டத் தொண்டர்களின் உழைப்பும், கட்சி மேலிடத்தின் வழிகாட்டலுமே காரணம்' என்று நரேந்திர மோடி பேசியிருப்பது குஜராத் அரசியல் களத்துக்குப் புத்துணர்ச்சியூட்டுவதாக இருக்கிறது.

'ஜீதேகா குஜராத்' (குஜராத் ஜெயிக்கும்) என்கிற பா.ஜ.க.வின் இலட்சிய வாசகத்துக்குக் கிடைத்த வெற்றி இது என்றும் மோடி கூறியிருக்கிறார். மோடி, தொடங்கிய வளர்ச்சிப் பணிகளும் நிர்வாக சீர்திருத்தங்களும் தொடரவேண்டும் என்று மக்கள் விரும்புவதையே இத்தேர்தல் முடிவுகள் உணர்த்துகின்றன. இதை மோடியும் உணர்ந்திருப்பதனால்தான் குஜராத்தின் 5.5 கோடி மக்களுக்கும் அவர் நன்றி கூறியிருக்கிறார்.

மத அடிப்படைவாதத்துக்குத் துணைபோகிற அணுகுமுறையை மோடி கையாண்டு வந்தாலும், நிர்வாக நேர்மையும் வளர்ச்சியில் (குறிப்பாக கிராமப்புறங்கள்) அவர் காட்டிய தீவிரமும், அவருக்கு ஆதரவைப் பெற்றுத்தந்துள்ளன. வாரிய பொறுப்புகளுக்குக் கட்சிக்காரர்களை நியமிக்க மறுத்த அவரது நேர்மை காரணமாக, பா.ஜ.க.வினர் மத்தியிலேயே அதிருப்தி வேட்பாளர்கள் தோன்றி, தனியே தேர்தலில் நின்று தோற்றும் போயிருக்கிறார்கள்!

அதே சமயத்தில், கடந்த தேர்தலைக் காட்டிலும் இந்தத் தேர்தலில் பா.ஜ.க.வுக்குப் பத்து இடங்கள் குறைவாகவும் (117) காங்கிரஸுக்கு எட்டு இடங்கள் கூடுதலாகவும் (59) கிடைத்துள்ளன என்பது






கவனத்துக்குரியது. பா.ஜ.க. இழந்த இடங்களுள் ஏழு தொகுதிகளில் மோடியின் அமைச்சரவை சகாக்கள் தோற்றுப்போயிருக்கிறார்கள். அவர்கள் இழந்த இடங்களை, காங்கிரஸ் வேட்பாளர்களே கைப்பற்றியிருக்கிறார்கள்.

இந்தப் போக்கு மோடிக்கும் பா.ஜ.க.வுக்கும் வெற்றியினிடையேயும் ஒரு பாடத்தை உணர்த்துகிறது.

நிர்வாகம் சீராக இருந்தும் இழப்பு ஏற்பட்டுள்ளது எனில், அதற்குக் காரணம் பா.ஜ.க.வின் மத அடிப்படைவாதம்தான். சிறுபான்மையினர் - பெரும்பான்மையினரிடையேயான பாகுபாடை குஜராத் பா.ஜ.க., அரசியல் ஆதாயத்துக்காகப் பயன்படுத்திக்கொள்ள பலமுறை முயன்றிருக்கிறது. இதனை எதிர்க்கும் முகமாகவும், பா.ஜ.க.வின் ஹிந்துத்வா பிடிவாதத்தை நிராகரிக்கும் எண்ணத்திலும்தான் வாக்காளர்களின் ஆதரவு அக்கட்சிக்குக் குறைந்திருக்கிறது. பல அமைச்சர்களும் தோற்கடிக்கப்பட்டிருக்கிறார்கள்! சோனியா காந்தியின் 'கொலை வியாபாரிகள்' வசனம் மட்டும் பேசப்படாதிருந்திருப்பின், காங்கிரஸுக்கு வாக்குகளும் வெற்றிகளும் மேலும் கூடியிருக்க வாய்ப்பு உண்டு. அதே அளவுக்கு பா.ஜ.க.வுக்கு இடங்கள் குறைந்தும் போயிருக்கும். சோனியாவுடைய தாக்குதல் ஏற்படுத்திய அனுதாப அலை, மோடிக்கு ஆதரவாக இருந்திருக்கிறது! இவற்றையெல்லாம் இரு கட்சிகளுமே கூர்ந்து கவனித்து, தங்கள் அணுகுமுறைகளைத் திருத்திக்கொள்வது நல்லது.

வெற்றியை அடுத்து தாம் பேசியுள்ள ஆக்கபூர்வமான வார்த்தைகளை மோடி என்றும் நினைவில் கொள்ளவேண்டும்:

'இது குஜராத்துக்குக் கிடைத்த வெற்றி'; 'ஆக்கபூர்வமான அணுகுமுறைக்குக் கிடைத்த ஆதரவு' என்றெல்லாம் கூறியதுடன், 'குஜராத் மக்கள் அவமானப்படும் வகையில் நான் ஒருபோதும் செயல்படமாட்டேன்' என்றும் வாக்களித்துள்ளார் மோடி.

இந்த வாக்குகள் காப்பாற்றப்பட்டால், பா.ஜ.க.வுக்கு 'ஹிந்துத்வா'வைக் கடந்த தொலைநோக்கு இருப்பது ஊர்ஜிதமாகும். குஜராத்தில் மட்டுமின்றி தேசிய அளவிலும் அக்கட்சி பலம் பெறும்.

# வட்டமேஜை

திருமாலைப் பார்க்கச் சென்ற நாங்கள் வாழைப்பழத்தைக்கூட விடாமல் குரங்கிட மிருந்து ஒளித்து வைத்துக்கொண்டு



## சிரிக்க வைத்த பாசுரம்!

ஓடினோம் என்று பாசுரத்தில் கூறியிருந்தது வாய்விட்டுச் சிரிக்க வைத்தது.

**தஞ்சை, ராஜன்**

இன்டர்வியூவுக்குச் செல்பவர்களுக்கு உபயோகமான டிப்ஸ் வழங்கி தன் னம்பிக்கை ஏற்படச் செய்தது விழிப் புணர்வுப் பக்கம்.

**விசலூர், ஜி.கோகுலகிருஷ்ணா**

தும்புரு பராக்... பராக்... அருமையான பகுதி. சபாக்களுக்கு நேரில் சென்று கச்சேரி கேட்ட உணர்வை ஏற்படுத்தியது.

**மதுரை, அ.முரளிதரன்**

அந்த எந்தரோ மகானுபாவுலுவுடன் (அதான்சார்! கலாம்!) டாக்டர் சுதா ரகுநாதனின் அட்டைப்படக் கற்பனை செம கலக்கல்! பேஷ்! பேஷ்!

**திருச்சி, வசந்தா ச. இராசன்**

**ரஜினி ரூட் - 9**
**அடுத்த வாரம்**

சாதாரண விஷயமானாலும் ஆலாய்ப் பறந்து அடைய நினைக்கும் நமது பேராசையே லஞ்சத்துக்கு அடித்தளமாக அமைகிறது என்பதை பைத்தியக்காரன் சிறுகதை உணர்த்தியது.

**நங்கநல்லூர், எஸ்.கோபாலன்**

கல்கி விழாவில் வேளுக்குடி கிருஷ்ணனின் சமயப் பேருரை, இரேவதி மோகனின் தலைமை உரை, காயத்ரி வெங்கட்ராமனின் வாழ்த்துரை எல்லாமே அமர்க்களமாக இருந்தது.

**சென்னை, ஜி.லட்சுமி**

## ஸ்பீடு போஸ்ட்

தர்மபுரி பஸ் எரிப்பு வழக்குக் கட்டு ரைக்கு 'நின்று வென்ற நீதி' தலைப்பு மிகவும் பொருத்தம்.

**வேலூர், வே.ந.கதிர்வல்**

மிரட்டல்களுக்கு அஞ்சி, ஓடும் நீதிபதிகளின் கோழைத்தனம் பற்றிக் கவலைப்பட்டு, நீதிபதிகள் சட்டத்தைக் கையிலெடுத்துக் கடமையாற்ற சொன்ன தலையங்கம் சூப்பர்!

**கோவில்பட்டி, ச.ஆதிகேசவன்**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612, 22762299.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

## புத்தாண்டு-பொங்கல் நல்வாழ்த்துக்கள்

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | | |
|---|---|---|---|
| • | காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • | மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • | இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • | இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • | ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • | ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • | குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்



## தஞ்சை பரத்வாஜ்

### மேஷம் :

இந்த ஆண்டின் தொடக்கமே மகிழ்ச்சியாக இருக்கும். எண்ணிய காரியங்கள் ஈடேறும். கல்வியில் முதல் மதிப்பெண் கிட்டும். சிலருக்கு மகப்பேறு பாக்கியம் உண்டாகும். குழந்தைகளால் மனச் சந்தோஷம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சிலருக்கு அயல் நாட்டு அழைப்புக் கிடைத்து வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். நீண்ட காலக் கடன் தொல்லை தீரும். பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். வேலை இல்லாதவர்களுக்குப் புதிய வேலைவாய்ப்பு தேடி வரும். பூர்வீகச் சொத்துகள் பாகப்பிரிவினையாகி கைக்கு வந்து சேரும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் நல்ல ஆதாயத்தை அடைவார்கள். எழுத்தாளர்கள், அச்சுத் துறை வல்லுனர்கள், கலைஞர்களுக்கு நல்ல ஏற்றமான வருடமாக இருக்கும். சமூக சேவகர்கள் பாராட்டுகளைப் பெறுவார்கள். வீடு/ மனை வாங்கும் யோகம் அமையும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் உண்டாகும். ராகு / கேது / ஆஞ்சநேயர் சுவாமியை அந்தந்த நாட்களில் வழிபட்டு வர நற்பலன்கள் உண்டாகும்.

### ரிஷபம் :

இந்த ஆண்டின் முதல் பத்து மாதங்கள் சற்று ஏற்றத்தாழ்வு உள்ளதாகவே இருக்கும். எதிலும் போராடி வெற்றிகளைப் பெற நேரிடும். உடல் ஆரோக்கியம் அடிக்கடி தொல்லை கொடுக்கும். திருமண விஷயத்தில் அலைச்சலுக்குப் பிறகு வெற்றி கிட்டும். புதிய தொழில் முயற்சிகளை, நான்கு மாதம் கழித்து ஆரம்பிப்பது நல்லது. பணப் பற்றாக்குறை இருக்கும். சிறுசேமிப்பு நற்பலனை அளிக்கும். மனக் கிலேசம் அதிகம் ஏற்படும். கல்வி விஷயத்தில் அதிக அக்கறை எடுத்துப் படித்து வருதல் நற்பலனை அளிக்கும். குடும்பப் பெண்களுக்கு வேலைப்பளு அதிகரிக்கும். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணக் காரியம் சற்றுத் தமதமாக நடக்கும். நண்பர், உறவினர்கள் மூலம் கடன்கள் வந்து சேரும். சொந்தத் தொழில் செய்பவர்கள் எதிலும் அகலக் கால் வைக்கக்கூடாது; இல்லையென்றால் கடன் சுமை அதிகரிக்கும். தாயின் உடல்நிலை பாதிக்கும். சிலருக்குக் கர்மயோகம் சித்திரிக்கும். சிலருக்குத் தாயை விட்டுப் பிரிந்துசெல்ல நேரிடும். மகப்பேறு பாக்கியம் சற்று தள்ளிப் போகும். சனி / ராகு / கேது / குரு பகவானை அந்தந்த நாட்களில் சென்று தீபம் ஏற்றி வழிபட நற்பலன் உண்டாகும்.

### மிதுனம் :

இந்த ஆண்டு ரொம்பவும் அற்புதமான ஆண்டாகும். தொட்டது துலங்கும். நீண்ட காலமாக நடைபெற்று வந்த வழக்குகள் சாதகமாக முடியும். மாணவர்கள் கல்வியில் நல்ல மதிப்பெண்கள் பெறுவார்கள். நல்ல வேலை கிடைக்கும். அயல்நாட்டு அழைப்பு வந்து சேரும். தடை விலகித் திருமணம் நடக்கும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். குழந்தைகளால் மனச் சந்தோஷம் ஏற்படும். தந்தை வழிச் சொத்துகள் வந்து சேரும். முயற்சிக்கும் காரியம் அனைத்தும் பலிதமாகும். இல்லத்தரசிகள், சமூக சேவகர்கள் பாராட்டுப் பெற நேரிடும். கலைஞர்கள், எழுத்தாளர்கள் அரசியல்

புத்தாண்டு

வாதிகள், அச்சுக் கலையில் உள்ளவர்கள் நற்பலன் அடைய நேரும். வீடு, மனை வாங்கும் யோகம் கிட்டும். உத்தி யோகத்தில் உயர்வு ஏற்படும். புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். பொருளா தாரக் கஷ்டம் இருக்காது. எதிர்ப்புத் தொல்லைகள் விலகும். மனத் தைரியம் அதிகம் ஏற்படும். ஏப்ரல் மாதத்துக்குப் பிறகு யாருடனும் அதிக பேச்சுவார்த்தை வைத்துக்கொள்ளாமல் இருப்பது நல்லது. உணவு விஷயத்தில் சரியான நேரத்தைக் கடைபிடிப்பது நல்லது. ராகு / கேது வழிபாடு செய்து வந்தால் சிரமங்கள் நீங்கி நற்பலன் உண்டாகும்.




* குருபகவான்

**கடகம் :**

இந்த வருடம் ஆரம்பமே சற்று சோதனையான ஆண்டாகத்தான் இருக்கும். இந்த வருடத்தின் முதல் நான்கு மாதங்கள் சற்றுச் சிரமம் அதிகமாக இருக்கும். படிக்கும் மாணவ, மாணவிகள் அதிக கஷ்டப்பட்டுப் படிக்கவேண்டியிருக்கும். குடும்பப் பெண்கள் அதிகம் பேசுவதைத் தவிர்க்கவும். எங்கு சென்றாலும் கைப் பொருளின் மீது கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. வாகனங்களில் செல்லும்போது உஷார். முகம் தெரியாத நபர்களிடம் அதிகப் பழக்கம் வைத்துக்கொள்ள வேண்டாம். வேலைப் பளு அதிகம் இருக்கும். ஆரோக்கியம் சற்றுத் தொல்லை கொடுக்கும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். கணவன் - மனைவி வழியில் துக்கம் ஏற்படும். வழக்கு இழுபறி ஆகும். வியாபாரத்தில் சற்று மந்தமான சூழ்நிலை இருக்கும். புதிய தொழில் முயற்சிகளைச் சற்றுத் தள்ளிப்போடவும். சமூக சேவகர்கள், கலைஞர்கள், அரசியல் வாதிகளுக்குச் சுமாரான ஆண்டாகும். திருமணக் காரியம் தாமதம் ஆகும். வீடு, மனை வாங்குவதை சற்றுத் தள்ளிப்போடவும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் வரும். ஆதலினால், எச்சரிக்கையுடன் நடந்துகொள்வது நல்லது. புதிய வேலைக்கு முயற்சி செய்பவர்கள் இருக்கும் வேலையில் இருப்பது நற்பலனை அளிக்கும். ராகு / கேது / சனி / குரு பகவானை தீபம் ஏற்றி அந்தந்த நாட்களில் வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

(மற்ற ராசிகள் அடுத்த வாரம்)

கிருஷ்ண கான சபையில், சஞ்சய் சுப்பிர மணியம் கச்சேரிக்கு விஜயாவும் நானும் போயிருந்தோம். சங்கீத சாகரத்தில் உல் லாசப் படகில் பயணம் மேற்கொண்டது போல அரியதோர் அனுபவம். ஒரு வினாடி நேரம்கூட மனம் சஞ்சய்யின் இசை யிலிருந்து விலகிச் செல்ல முடியாதபடி, அப் படி ஓர் ஈர்ப்பு சக்தி அவர் பாட்டுக்கு இருக்கிறது. இது விமர்சனக் கட்டுரை இல்லை. ஆதலால், இத் துடன் நிறுத்திக்கொண்டு விஷயத்துக்கு வருகிறேன்.


* சஞ்சய் சுப்பிரமணியம்

# கற்றுக்கொண்டே இருந்த கலைவாணி!

அன்று சஞ்சய் 'கோமளாங்கி' என்ற ராகத்தை (சாருகேசி ஜன்யம்) ரசிகர்களுக்கு அறிமுகப்படுத்தினார். பிரமிக்க வைக்கும் ஓர் ஆலாபனை; தானம் பாடி விட்டு, 'இந்த ராகத்தில் தண்டபாணி தேசிகர் ஒரு பாட்டு போட்டிருக்கிறார். அதன் பல்லவியை மட்டும் எடுத்துக்கொண்டு பாடு கிறேன்' என்றார். பல்லவி, ராக மாலிகை சுவரங்கள் எல்லாம் தொடர்ந்தன.

வீட்டுக்குத் திரும்பிய பிறகும் பல்லவியை மனம் இசைத்துக்கொண்டிருந்தது. கூடவே தண்டபாணி தேசிகர் பற்றிய நினைவுகள். அவருடைய சிரித்த முகம், காது கடுக் கன்களுடனும் வைர மோதிரங்களுடனும் போட்டி போடும்! தமிழிசை இயக்கம் காரணமாக 'கல்கி'க்கும் தேசிகருக்கும் இடையே நெருங்கிய நட்பு உண்டு.


* தண்டபாணி தேசிகர்

அப்பா காலமாகி சில ஆண்டுகள் சென்று நான் கல்கி காரியாலயத் தில் பணியாற்றிக்கொண்டிருந்தபோது, ஒரு சமயம் சதாசிவம் என்னை அழைத்தார். ''குஞ்சம்மாவுக்கு (எம்.எஸ்.) ஒரு பாட்டு (என்ன பாடல் என்பது இப்போது நினைவில்லை) சாதகம் பண்ணணும். தண்டபாணி தேசிகர் அதைக் கச்சேரியில் பாடியிருக்கார். நீ நேரில் போய் அவரை அழைச்சுண்டு வரணும்'' என்றார்.

சதாசிவத்துக்கு யாரை, எதற்குப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது தெரியும். கல்கி'யின் மகன் போய் அழைத்தால் தேசிகர் தட்டாமல் வந்து விடுவார் என்பது மட்டுமல்ல; நான் நேரில் செல்வது தேசிகருக்குக் காட்டும் மரியாதையும்கூட என்பதை உணர்ந்து செயல்பட்டார்.

நானும் காரை எடுத்துக்கொண்டு தேசிகர் வீட்டுக்குப் போனேன். விஷயத்தைச் சொன்னேன்.

''வந்திருக்கிறது யாரு?'' என்று தேசிகர் கேட்டுவிட்டுத் தாமே பதில் சொன்னார்:

# கல்கி ராஜேந்திரன்

''கல்கி'யின் மகன்! யாருக்காக வந்திருக்கீங்க? எம்.எஸ். சார்பாக சதாசிவம் அனுப்பி வந்திருக்கீங்க. நான் உடனே புறப்பட வேண்டியதுதானே... ஆனா... பாரு, தம்பி...''

எனக்குள் ஏற்பட்ட மனப்பூரிப்பு அந்த 'ஆனாலை'க் கேட்டதும் 'புஸ்'ஸென்று' அடங்கிவிட்டது.

தேசிகர் என் கையைப் பிடித்துக்கொண்டு வீட்டின் உள்கட்டுக்கு அழைத்துப்போனார். சாத்தியிருந்த ஒரு கதவுக்கு முன்னால் நின்றார். ''இந்தக் கதவுக்குப் பின்னால் என் மனைவி படுத்த படுக்கையாயிருக்கா. (உடல் நிலை பற்றி சில விளக்கங்கள் தந்தார்). அவளை இந்த நிலையில் விட்டுப் பிரியறதில லேன்னு ஒரு தீர்மானம் பண்ணியிருக்கேன்...'' தேசிகருக்கு நா தழுதழுத்தது. கதவைத் திறந்து 'வா, தம்பி' என்று அழைத்துப்போனார்.

சில வினாடிகளில் மீண்டும் வெளியே வந்தோம். மனைவி எதிரே சகஜமாக நின்ற தேசிகர், இப்போது கண்களில் துளித்த நீரைத் துடைத்துக்கொண்டார். ''உங்களை ஏமாற்றத்துடன் நான் திருப்பி அனுப்பக் கூடாது; ஒண்ணு செய்யறேன், என் சிஷ்யனை அனுப்பறேன். அவனுக்கு அந்தப் பாட்டு நல்லா பாடமாயிருக்கு'' என்றார்.

வேறு வழியின்றி 'சரி' என்று சொல்லி, சிஷ்யரைக் காரில் ஏற்றிக்கொண்டு புறப்பட்டேன். தேசிகருக்குத் தமது மனைவிமீது இருந்த அன்பு எவ்வளவு உயர்வானது என்று எண்ணி வியந்தேன். அதே சமயம் சதாசிவம் இதை எப்படி ஏற்பாரோ என்ற கவலை, ஒரு பயத்தையும் உருவாக்கியது. சதாசிவத்தின் கோபம் ஜகத்பிரசித்தமாயிற்றே!

9

* முசிறி சுப்பிரமணியம்

* எஸ். ராமநாதன்

சிஷ்யரோடு கல்கி காரியாலயத்துக்கு வந்து சேர்ந்தேன். முன் வராந்தாவில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் ஒன்றில் அமரச் செய்துவிட்டு, உள்ளே போய் சதாசிவத்தின் அறைக்குள் நுழைந்தேன். தயக்கத்துடன் விஷயத்தைச் சொன்னேன்.

''சிஷ்யரை அழைச்சுண்டு வந்திருக்கியா?'' என்று ஏமாற்றம் தொனிக்கக் கேட்டார் சதாசிவம். அடுத்த கணமே அவர் முக பாவம் மாறியது. ஒரு முடிவுக்கு வந்தவர் போல, ''பேஷாப் போச்சு'' என்றார். ''மாடிக்கு அவரை அழைச்சுண்டு வர்றியா?'' என்று கேட்டுக்கொண்டே

70 முதல் 7 வரை

நடந்து, மாடிப்படிகளில் விரைந்து ஏறினார். சதாசிவத்தின் இல்லம் கல்கி காரியாலயத்தின் மாடிப் பகுதியில் இருந்தது.

நான் சிஷ்யருடன் படியேறும்போது, சதாசிவம் தமது மகளுடன் பேசும் குரல் கேட்டது: ''என்ன ராதா! தேசிகருக்கு வர முடியலை; அவர் மனைவிக்கு உடம்பு சரியில்லையாம்; பாவம். சிஷ்யரை அனுப்பியிருக்கார், நீ உட்கார்ந்து பாடம் பண்ணுறியா?'' என்று கோரிக்கை தொனியில் உத்தரவிட்டார்.

'அடேயப்பா என்ன சாமர்த்தியம்!' என்று நினைத்துக்கொண்டேன். தேசிகரின் சீடரிடம் எம்.எஸ்.ஸின் சிஷ்யை (மகள் ராதா) பாட்டைக் கற்றுக்கொண்டு விட்டால், பிறகு மகளிடமிருந்து தாயார் கிரகித்துக் கொள்வதில் என்ன சிரமம்? அதிலும் எம்.எஸ்.ஸுக்கு இதெல்லாம் சர்வ லகுவாயிற்றே!



தேசிகர், இப்படி ஒரு வழி இருக்கிறது; அது சதாசிவத்துக்கும் தெரியும் என்று உணர்ந்தே சீடரை அனுப்பியிருப்பாரோ! என்று எண்ணிப் பார்த்தேன். இருக்கலாம்!

இதே மாதிரி ஒரு சமயம் முசிறி அவர்களை அழைத்துவர என்னை அனுப்பினார் சதாசிவம். ஆலிவர் சாலை சென்றேன் (இப்போது முசிறி சுப்பிரமணியம் சாலை). மாடி கூடத்தில் ஐந்தாறு சிஷ்யைகள் பாடிக்கொண்டிருந்தார்கள்.

''இது யார் தெரியுமோ? 'கல்கி' மகன்!'' என்று அறிமுகம் செய்தார். ''உட்கார்ந்து கேளு'' என்று உத்தரவு போட்டார்.

கச்சேரி கேட்பது வேறு; பாட்டு கற்றுத்தரப்படும்போது பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருப்பது வேறு! 'சிவனே' என்று இரண்டு பாட்டு கேட்டேன். பிறகு மெல்ல எழுந்து நின்றேன். முசிறி புரிந்து கொண்டார். ''கிளாஸ் முடிய இன்னும் ஒரு மணி நேரம் ஆகும்; அப்புறம் நானே கிளம்பி வர்றேன். நீ காத்திருக்க வேண்டாம்; போய் சதாசிவத்திடம் சொல்லு'' என்றார்.

'இந்த மட்டில் தப்பினோம்' என்று அங்கிருந்து நழுவினேன்.

மற்றொரு சமயம் திருவல்லிக்கேணி சென்று சங்கீத பூஷணம் எஸ்.ராமநாதனை அழைத்து வரச் சொன்னார் சதாசிவம். அன்றும் கிளாஸ் நடந்துகொண்டுதானிருந்தது. என்னைப் பார்த்ததும் ராமநாதன், 'இவர் 'கல்கி'யின் மகன்; எம்.எஸ்.ஸின் மாப்பிள்ளை; என்னை அழைச்சுண்டு போக வந்திருக்கார்; இப்ப நான் என்ன செய்யட்டும்? என்று சிஷ்யைகளையே கேட்டார்.

ஒரு பெண் துணிந்து, ''இன்னிக்கு கிளாஸுக்கு லீவு'' என்று முத்தாய்ப்பாகக் கூற, ராமநாதன் சிரிப்புடன் எல்லோரையும் அனுப்பிவிட்டு என்னுடன் கிளம்பினார்.

**எம்.எஸ்.ஸின் தனிப் பாணியில் பாடல் மெருகேறியபோது, சொல்லிக் கொடுத்தவர்களே 'ஆஹா'காரம் செய்து போற்றும் அளவுக்கு ஜொலித்தது!**

செம்மங்குடி, முசிறி, ராமநாதன், கே.வி.என்., கே.எஸ்.நாராயணசாமி... இன்னும் எத்தனையோ தென்நாட்டு- வடநாட்டு வித்வான்களிடம் எம்.எஸ். அவர்கள் பல பாடல்களைப் பயின்றார். கடைசி வரை சீடராகவே இருந்தார். ஆனால் ஆச்சர்யம் என்னவென்றால், எந்த ஒரு பாடலையும் அவர் கானம் செய்த பிறகு, அது எம்.எஸ்.ஸின் தனிப்பாணியில் மெருகேறியது. சொல்லிக் கொடுத்தவர்களே 'ஆஹா'காரம் செய்து வியந்து போற்றுமளவில் ஜொலித்தது என்பதுதான்.

(பேசுவோம்)

தமிழ்நாட்டுக்குப் பல்வேறு வகையில் சிறப்பான சேவை புரிந்த சில பிரபலங்களுக்கு, தமிழக மக்களின் சார்பில் 2007ஆம் ஆண்டுக்கான வில்லங்க விருதுகள் வழங்கப்படுகின்றன!

# வில்லங்க விருது

**கலைஞர் கருணாநிதி - தமிழ்நாட்டு கொலம்பஸ்**

ராமாயணம் கற்பனைக் கதை; ராமர் கற்பனைக் கதாபாத்திரம் என்பதைக் கண்டு பிடித்து உலகுக்குச் சொன்னதற்காக!



**டாக்டர் ராமதாஸ் - நவீன விக்கிரமாதித்தன்**

ஆளும் கட்சியினரின் குற்றச்சாட்டான கேள்விகளுக்கு உடனுக்குடன் பதிலளித்து, மாதம் ஒரு போராட்டம் நடத்தி, தமது மண்டை வெடித்துவிடாமல் பார்த்துக் கொண்டதற்கு!



### ஆற்காடு வீராசாமி - மின்சாரக் கண்ணன்

மின்சாரப் பற்றாக்குறைக்குப் பல்வேறு காரணங்களைக் கண்டறிந்து, மக்களை கோபியர்களாக்கி, மாயவார்த்தைகளால் குழப்பிச் சமாளிக்கும் திறமைக்கு!





### சிம்பு - மாடர்ன் நாட்டாமை

'தீர்ப்பை மாத்திச் சொல்லு' என்றவரை, 'லெஃப்ட் அண்ட் ரைட்' வாங்கி, ஓவர் நைட்டில் ஊரெல்லாம் பேச வைத்தமைக்கு!



### ஜெயலலிதா - அமைதிப் புறா

ஆளுங்கட்சியின் கூட்டணியில் இருப்பவர்களே போராட்டம், உண்ணாவிரதமென தூள் கிளப்புகையில், வெறும் செய்தி அறிக்கைகளோடு, தமது எதிர்கட்சிப் பணியை முடித்துக்கொள்ளும் பண்பாட்டுக்கு!



### குஷ்பு - கலியுக ஜான்ஸிராணி

பல்வேறு ஊர்களிலிருந்து படையெடுத்து வரும் வழக்குப் போர்களை, தனி ஆளாக நின்று துவம்சம் செய்யும் தைரியத்துக்கு!



### சிறந்த படம் - சிவாஜி

ஒன்றுமே இல்லாமல் உலகம் முழுவதும் வெளியிட்டு

## ...கள் - 2007

வெற்றிக்கொடி நாட்டிய சாதுர்யத்துக்கு!



### சிறந்த தொலைக்காட்சி - கலைஞர் டீ.வி.

இரவு தூங்கிய மக்கள் காலையில் விழிப்பதற்குள் ஒரு சேனலைத் தொடங்கி, வேறொரு சேனலின் பிரபலங்கள் பலரை வளைத்துப்போட்ட வேகத்துக்கு!



### சிறந்த நடிகர்கள்

'ஜோடி நம்பர் ஒன்' நிகழ்ச்சியில் வெளியேறியதும், உலகமே இருண்டுவிட்டதைப் போல் கண்ணீர்விட்டு ஃபிலிம் காட்டிய அத்தனை பேரும்!

— கு.கும்புராஜ்

# லீவு கிடைக்குமா?

'பேசாமல் ரிட்டையர் ஆகிவிடலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.' கவனிக்கவும். யோசித்துக்கொண்டிருக்கிறாராம். போன வாரம் எழுதிய கடிதத்தில்தான் முதன்முறையாக இந்த யோசனை பிறந்திருக்கிறது. எண்பத்தோரு வயசுத் தாத்தா. 1959 முதல் கியூபாவின் அதிபராக உத்தியோகம் பார்த்துக்கொண்டிருக்கிறார். நடுவில் தலைவலிக்குக்கூட லீவு எடுத்தது கிடையாது. தொப்பையில் ஆபரேஷன் செய்ய வேண்டும் என்றதும் வேறு வழி தெரியாமல், தம்பி ரால் காஸ்ட்ரோவிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, ஒன்றரை ஆண்டுகள் ஓய்வை நாடினார்.

எந்த ஓர் இளைஞனைக் காட்டிலும் ஃபிடல் காஸ்ட்ரோவின் சிந்தனைக்கும் செயலுக்கும் வேகமும் விவேகமும் அதிகமே. 'இத்தனை பலம் உங்களுக்கு எங்கு கிடைக்கிறது?' என்று கேட்டால், அவர் சுட்டிக்காட்டுவது புத்தகங்களை. 'வாழ்நாள் முழுவதும் எத்தனை முடியுமோ அத்தனை புத்தகங்களைப் படித்து வந்திருந்தபோதும், படிப்பதற்கு நேரம் போதவில்லை என்ற குறை எனக்கு எப்போதும் உண்டு. நூலகங்களையும், புத்தகங்களின் பட்டியலையும் பார்க்கும்போதெல்லாம் என் வாழ்நாள் முழுவதையும் படிப்பதிலும் கற்பதிலும் செலவிட முடியவில்லையே என்று வருந்துகிறேன்.'

காஸ்ட்ரோ படிக்காத புத்தக வகைகளை விரல்விட்டு எண்ணிவிடலாம். படித்தவற்றில் அதிகம் பிடித்தது வரலாறு. கியூபா வரலாறு, உலக வரலாறு தொடர்பாக எழுதப்பட்டுள்ள அனைத்துப் புத்தகங்களையும் அவர் வாசித்திருக்கிறார்.

சில சமயம் குவியல் குவியலாக விவசாயம் குறித்த புத்தகங்களை வாங்கி வந்து படிப்பார். பிறகு, கால்நடை வளர்ப்பு, இயற்கை மருத்துவம். பிறகு, சம்பா நெல் சாகுபடி. வெப்ப மண்டல விவசாயம் பற்றி சுமார் நூறு புத்தகங்களை வாசித்திருக்கிறார். ஏன்? ஒரு செய்தித்தாளில் வெப்ப மண்டல விவசாயம் எனும் பதத்தைப் பார்த்திருக்கிறார். இதென்ன புதிதாக இருக்கிறதே என்று இந்தத் துறை சார்ந்த செய்திக் கட்டுரை ஒன்றை

படித்திருக்கிறார். அதில் கொடுக்கப்பட்ட விவரங்கள் போதாமல் போகவே, ஒரு சிறிய புத்தகம். பிறகு மற்றொரு புத்தகம். இப்படிச் சிறிது சிறிதாக முன்னேறி நூறு புத்தகங்களை வாசித்துவிட்டு, 'ஓ! இது தானா வெப்ப மண்டல விவசாயம்!' என்று ஆச்சரியப்பட்டுவிட்டு, அந்தத் துறையை விட்டு வெளியே வந்திருக்கிறார்.

தினமும் தோழர்கள்தான் அவரது மேஜையில் அவர் வாசிக்க வேண்டிய செய்தித்தாள்களை வைப்பது வழக்கம். சில செய்திகளை, இது இவருக்கு வேண்டாமே என்று நினைத்து விட்டுவிடுவார்கள். மிகச் சரியாக அதைத்தான் தேடிப் பிடித்துப் படித்துவிட்டுத் தோழர்களுடன் சண்டையிடுவார். இவருக்கு எது முக்கியம்; எது முக்கியமல்ல என்று தீர்மானிப்பது மிக மிகச் சிரமமானது. கோழி வளர்ப்பு பற்றிய நீண்ட புத்தகம் இவருக்கு நிச்சயம் தேவையிருக்காது என்றுதான் தோழர்கள் நினைப்பார்கள். ஆனால், எங்காவது ஓர் அறிக்கையில் கோழி வளர்ப்புப் பற்றிய விவாதம் எழுப்பப்படும்போது, அந்தப் புத்தகத்தை உடனடியாகக் கொண்டுவரச் சொல்லிக் கேட்பார்.

'நான் என்னை வேலைக்கு அர்ப்பணித்துவிட்டேன். நான் அதன் அடிமை. நான் பார்க்க நினைக்கிற' செய்ய நினைக்கிற, பணிகளை நான் பிறருக்குத் தருவதில்லை. எனக்கு வேலை செய்யப் பிடிக்கும். காலம் முழுவதும் நான் அப்படி இருக்கவே விரும்பியிருக்கிறேன்.' இப்படிச் சொல்ல முடிந்ததால் தான், காஸ்ட்ரோவால் இக்க நிமிடம் வரை துடிதுடிப்புடன் இருக்க முடிகிறது.



காஸ்ட்ரோவிடம் மிகத் தெளிவாக வரையறுக்கப்பட்டிருந்த செயல் திட்டம் இருந்தது. கியூபாவுக்கு எது தேவையோ அதை மட்டும் கையில் எடுத்துக்கொண்டார்கள். எது அத்தியாவசியமோ அது குறித்து மட்டுமே ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன, நடத்தப்படுகின்றன. யாரையும் பார்த்துச் சூடு போட்டுக்கொண்டதில்லை. அதே சமயம் இயற்பியல், வேதியியல் கண்டுபிடிப்புகளுக்குத் தேவையான கணிப்பொறி அறிவை அவர்கள் பெற்றிருந்தார்கள்.

கல்வித் துறையில் கியூபா நிகழ்த்திக் காட்டிய சாதனை மகத்தானது. குழந்தைகள் எங்கெல்லாம் இருக்கிறார்களோ அங்கெல்லாம் பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டன. மனவளர்ச்சி குன்றிய மாணவர்களுக்குச் சிறப்புப் பள்ளிகள். பெண்கள் கட்டாயம் கல்வி கற்க வேண்டும். பொருளாதார தடை காரணமாக மின்சாரமும், எரிபொருளும் கிடைப்பதில்லை. ஆனால், பள்ளிகளுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டு மின்சாரம் ஒதுக்கித் தரப்படுகிறது. வீடுகளில் மாற்று சக்தியைப் பயன்படுத்துகிறார்கள்.

காஸ்ட்ரோ லீவு எடுத்துக்கொண்டாலும் கியூபா உயிர்த்திருக்கும்.

**(நிறைந்தது)**

## வாரம் ஒரு பாசுரம் பாகம் – 2

# 3 யாரும் அறியார்

சுஜாதா

திருமழிசை ஆழ்வார், முதலாழ்வார்களுக்குச் சமகாலத்தவர். திருமழிசை என்பது தொண்டை நாட்டில் உள்ளது. திருமழிசை ஆழ்வார் ஜைனம், பௌத்தம், சைவம் எல்லா சமயங்களையும் பார்த்தவர். பல காலம் திருவல்லிக்கேணியில் வாழ்ந்தவர். அவர் பாடிய நான்முகன் திருவந்தாதியில் அறியார் சமணர், அயர்த்தார் பவுத்தர் என்று பிற சமயங்களை நிராகரித்திருக்கிறார். தன்னைப் பொறுத்தவரை அவர் இறுதியில் நாராயணனிடம் நேராகப் பேசுகிறார்.

*"இன்றாக நாளையேஆக இனிச் சிறிது*
*நின்றாக நின்அருள் என் பாலதே -*
*நன்றாக*
*நான் உன்னையன்றி இலேன்*
*கண்டேன்; நாரணனே!*
*நீ என்னை அன்றி இலை."*

இன்றோ நாளையோ, சிறிது காலம் பொறுத்தோ உன்னுடைய அருள் எனக்குக் கிடைக்கத்தான் போகிறது. காரணம், உன்னை விட்டால் நான் இல்லை; என்னை விட்டாலும் நீ இல்லை, நாரணனே!

இந்தக் கடைசி வரி நம்மை மிகவும் சிந்திக்க வைக்கிறது. பக்தன் இல்லையேல் பகவான் இல்லை என்பது கருத்து. இருவரும் ஒருவர் பால் ஒருவர் சார்ந்தவர்... complimentary.

*"தேருங்கால் தேவன்*
*ஒருவனே என்றுரைப்பர்*
*ஆரும் அறியார் அவன்*
*பெருமை"* என்கிறார்.

யோசித்தால் இறுதியில் எல்லாம் அவனிடத்தில் முடிவடையும் என்கிறார்.

இன்று சில கோயில்களில் கூட்டம் அம்முவதும் சில கோயில்களில் ஈயடிப்பதும் ஏன் என்று நீங்கள் யோசித்திருக்கலாம். அதற்கு பதிலை திருமழிசை ஆழ்வார் அப்போதே சொல்லி விட்டார்.

'நீ என்னை அன்றி இலை.'

(படிக்கலாம்)

Gurunathar Charanam



# PRASHANTI

House of Silk Cottons






தைமாதம் வந்து விட்டால்
திருமணங்கள் கூடி வரும்...

Go for Prashantis
Vivaham Vaiboham Collections
an Ultimate choice...

**சில்க் காட்டன் என்றாலே பிரசாந்தி!!!**

அட...! இது, பிரசாந்தியின் விவாஹம் புடவை அல்லவா...!

Festival Offer!
upto 12.01.2008

7% for SILK COTTONS
5% for OTHERS...

**PRASHANTI**
16, 6th Cross St, C.I.T. Colony,
(Behind Chettiar Hall) Mylapore, Ch - 4.
Ph: 24991850 / 24997636

**PRASHANTI'S PARIPURNA**
# 52, 4th Main, 17th Cross,
Malleswaram Bangalore - 55.
Ph: 23341632 / 98861 85951

Timing: 10 am to 8 pm | Sunday Holiday | Major Credit Cards Accepted

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd.)

**"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"**

29-30, East Iyen Street, KUMBAKONAM, Thanjavur Dt. Tamil Nadu -612 001. India.
E-mail : vedagdps@sancharnet.in Website : www.rajapatasala.in

☎ Off : (0435) 2425948 2401789
Fax : 2425948
Patasala : 2401788 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் முதாதையர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 465 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 17 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 8,000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் படிக்கும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

Mar-2007

# புவியீர்ப்பு விசையைத்

மழை மரத்தின் கிளைகளில் சிறகுகள் நனைந்து, மழைநாள் முழுவதும் மௌனமாய் இரையின்றி தவமிருந்த பச்சைக்கிளிகள், வானம் வற்றி, இளஞ்சூட்டு வெயில் இலைகளில் இருக்கும் ஈரத்தைப் பொன்மயமாக்கும் போது உற்சாகத்துடன் பறக்கும் ஓசை.




சருகுகளின் சலசலப்புக்கும், இறகுகளின் கலகலப்புக்கும் வித்தியாசம் உண்டு. ஒன்று உதிர்ந்து விழுந்த புலம்பலின் ஓசை; மற்றொன்று பறந்து செல்லும் எழுச்சியின் இசை.

வாழ்க்கையில் மகிழ்ச்சியடைய எத்தனையோ கதவுகள் திறந்திருக்கின்றன. கணினியே உலகமென்றும், பாடப்புத்தகங்களே போதுமென்றும் மூச்சுத்திணறும் ஒவ்வொரு நொடி

# தாண்டி...

- வெ. இறையன்பு
ஐ.ஏ.எஸ்



யிலும், நாம் நம்பிக்கை நழுவிச் செல்லும் அபாயத்தைக் கக்கத்தில் வைத்து இருப்பைக் கடினமாக்கிக் கொள்கிறோம்.

இல்லம் வீட்டில் இல்லை, வெளியிலி ருக்கிறது என உணர்பவர்களுக்கு மர மல்லிகை மரமே பூஞ்ஜாடி, அடர்கரு மேகமே பன்னீர்க் குவளை, பூங்காவில் வீசும் பூங்காற்றே வாசனைத் திரவியம்.

அருகிலிருக்கும் அருவியை அரைமணி நேரம் ரசித்தாலே மனம் கனம் இழந்து விடுகிறது. மலைச்சாரல்களில் இருக்கும் அமைதியை நுகர்ந்தாலே கவலை கரைந்து விடுகிறது. கோயில் சிற்பங்களின் நுட் பங்களின் அர்ப்பணிப்பு நம்மை அதி சயப்பட வைக்கிறது. இரவிலும் உறங்காத ஆறு நமக்கு இயக்கத்தைக் கற்றுத் தருகிறது.

வெட்ட வெட்ட வளரும் மரங்களிடம் தான் நான் வேகத்தைக் கற்றேன்...

தட்டத் தட்டத் தாவும் பந்திடம்தான் நான் வைராக்கியத்தைப் பெற்றேன்.

தூக்கு மேடையின் விளிம்பிலும் புன்ன கையுடன் விடைபெற்றவர்கள் இருக் கிறார்கள். மரணத்தின் மடியிலும் மண்டி யிடாதவர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். கண்ணீர்விட்டுக்கொண்டே வாழ்கிறவர் களைவிட, சிரித்துக்கொண்டே செத்துப் போனவர்களைத்தான் சரித்திரம் பத்திரப் படுத்திப் பாதுகாக்கிறது.

மரணத்திலிருந்து கடைசி நொடியில் தப்பித்தபோதுதான் தாஸ்தோவஸ்கி வாழ்க் கையின் பொருளைப் புரிந்துகொண்டார். அதற்குப் பிறகுதான் அவர் மை, மகத்தான காவியங்களை எழுதும் மயிலிறகானது.

**பு**திய இடங்களுக்குப் பயணித்து இருத்தலின் அருகில் அமர்ந்திருப்பதுதான் சுற்றுலா. அப்போது மனம் முழுவதையும் அந்த அனுபவங்களால் மகரந்தம் பூசும் ரசவாதம் நிகழும். நம் தேடலைத் தீவிரப் படுத்தும் புத்துணர்வு நம்மைத் தொற்றிக் கொள்ள இந்த இடமாறு தல் அவசியம்.

ஓய்வெடுக்கச் செல்கிற இடங்களிலும் பரபரப்பாய் இருப்பவர்கள் இருக்கிறார்கள். படகுச் சவாரி தாமதமாகும்போது ஏரியை ரசிக்கலாமே; ஊர்தி வரும்வரை அறிமுக மாகாத மனிதர்களைப் படிக்கலாமே! பழகிய இடங்களின் வெறுப்புகளை உமிழ்ந்து விட்டுப் பயணிப்பவர்களுக்கே உலா, தேனூறும் இதழ்களைத் தரச் சம் மதிக்கும்.

அடர்ந்த வனத்தில் சஞ்சரிக்கும்போது, நாம் எதிர்பார்க்கும் அங்கீகாரம் எவ்வளவு வியர்த்தமென்பது விளங்குகின்றது.

காகங்கள் கைதட்ட வேண்டுமென்று குயில்கள் காத்திருப்பதில்லை;

மந்திகள் மகிழ வேண்டுமென மயில் கள் நடனமாடுவதில்லை;

வாத்துகள் வாழ்த்துரை வழங்க வானம் பாடிகள் எதிர்பார்ப்பதில்லை;

செய்கிற செயலே பரிசுப் பொருளாகும் நிறைவே அவற்றை வழிநடத்துகின்றன.

ஒவ்வொரு பயணத்திலும் இன்னொரு சிறகு முளைக்கும் சுதந்திரத்தை உணர முடியும். வெறுப்பும் சோர்வும் விடை பெறும் இனிமையை நுகர முடியும்.

உற்சாகப் பந்தாய் உந்திச் செல்லும் ஒருவரிடம் கேட்டார்கள்,

''நாம் சோர்வடையும்போது என்ன செய்ய வேண்டும்?''

''அடுத்தவர்களை உற்சாகப்படுத்த வேண்டும்.''

சந்தனம் பூசும் கைகளும் மணக்கின் றன; மலர்களை விசாரிக்கும் விரல்களும் கமழ்கின்றன. ஆழ்ந்த கடலாய் விரிந்திருக் கும் சவாலைச் சின்னபடகாய் சமாளிப் பதே வாழ்க்கை.

நம்மை நாமே அடுத்த கவடியாய் பதிப்பிப்போம்;

எடுத்து வைக்கும் ஒவ்வொரு கவட் டையும் புதுப்பிப்போம்.

# முறைத்தண்ணி

கல்லோடை கிணற்றில் இன்னிக்கு சேவல், கிடாய் வெட்டி பொங்கல் வெக்கப் போறாக, ஏன்னா, அந்தக் கிணற்றில் புதுசா கரண்டு மோட்டரு, குழாய் மாட்டப் போவுது. தாத்தாக்கமாரு காலத்துல கமலை வண்டி எறவைதான். பிறகு சடசடன்னு டீசல் என்ஜின்; இப்போ கரண்டு மோட்டரு.

பொங்கல் வெக்க ஒரு மாட்டு வண்டி நிமுற சனங்க வந்தாங்க. மாட்டு வண்டிக்கு அடியில சேவல் கெக்கெரபிக்கரன்னு தலை கீழா வந்தது. வண்டி வளையத்தில் செம் மறி பாட்டங்கிடாயைக் கட்டிவிட்டுருக் காக, அது தலையைச் சுழட்டிக்கிட்டு வண்டிக்குப் பின்னால ஓடியாந்தது. வண்டில பொங்கப் பானை, விறகுக்கட்டுச் சாமான்கள்லாம் இருந்தது. பூசை செய்யற துக்குக் காளிராகப் புலவரும் இருக்காரு. அவர், சாமியாடி துந்நூரு போட்டா எப் பேர்பட்ட சீக்குன்னாலும் குணமாயிரும். அவர் குறி சொன்னாத் தப்பாமப் பலிக்கும். வண்டியில கப்பாச்சியும் வந்தாள். அவள் முறைத்தண்ணி பாய்ச்சுறதைப் பத்தி நடந்த ஒரு கதையைச் சொன்னாள். அது எப்படின்னா...

"நம்ம கல்லோடை கிணத்தில் மொத்தம் மூணு பங்கு, ஆளுக்கு ஒரு நாள் தண்ணீப் பாய்ச்சிக்கிடணும். அவரவர் முறை வரும்போது கரெக்டாப் பாய்ச்சணும். ஒராளு பாய்ச்சாம விட்டுட்டா அடுத்த நாள் வேறாளு முறை. அவரு சம்மதிக்காம வேற யாரும் கிணத்துக்கிட்ட போக முடியாது. நல்ல சம்சாரி முறைப் பெண்ணைக்கூட விட்டுக்குடுத்திருவான்; முறைத் தண்ணியை விடமாட்டான்.

உங்க தாத்தாமாருகல்ல ரெண்டு பேரு. ஒருத்தர் நண்டு; இன்னொருத்தர் தூங்கைய்யா. இது பட்டப்பேரு. பெரியாட்கள் வெச்சது மகாலிங்கம்; சண்முகைய்யா. மகாலிங்கம் தாத்தா மூத்தவர், இவருக்குப் பட்டப் பேரு எப்படி வந்ததுன்னா, இளந்தாரியா இருந்தப்ப கொஞ்சம் மெலிஞ்சு நோஞ்சனா இருந்தாரு. அவர்கிட்ட ஒரு வைத்தியன் நீ நண்டுக் கறி அவிச்சுச் சாப்பிடுன்னு மருந்து சொன்னான். இவரும் ஒரு குளம்கூட விடாம நண்டுகளைத் தூக்கு வாளில பிடிச்சாந்து குழம்பு வெச்சுச் சாப்பிட்டுக்கிட்டே வந்தார். கொஞ்ச நாள்ல, நல்லாயிட்டார்.

பிறகு இளவட்டக் கல்லையெல்லாம் அத்தாசமா தூக்கிப் போடுவார். இப்படி நண்டுக் கறி தின்னதால நண்டு ஆயிட்டாரு.

''சண்முகைய்யா தாத்தா கதை வேற. சின்னப் பயலா இருந்தப்ப ஒரு எடத்துல ஒரு அஞ்சு நிமிசம் உக்காந்தா அங்கனக்குள்ளேயே அசந்த மானிக்கு தூங்கிருவார். பிறகு வீட்ல இருந்து போய் அவரைக் கூட்டியாரணும். இப்ப நம்ம தம்பிப் பயலும் அவரை உரிச்சு வெச்ச மாதிரிதான், இருந்த லெக்குல தூங்குதான். இதனாலதான் இவனுக்கும் அவ மாதிரியே தூங்கைய்யான்னு பேராயிருச்சு.

''இவுகல்ல மகாலிங்கம் தாத்தா சம்சாரித்தனத்தைக் கண்ணுங்கருத்துமா பாப்பார். அவருண்டு அவர் சோலியுண்டுன்னு இருப்பார். ஆனா, தூங்கைய்யாவோ கெட்டிக்காரத்தனம் பண்ணுவார். ஒரு தடவை அம்மன்கோயில் கொடைல 'கிராமின்சு'

கிடாயை முதல்ல வெட்டக் கூடாது; என் கிடாயை வெட்டுங்கல''ன்னு முதல் மரியாதைக்குச் சண்டை போட்டுருக்கார். ''என்னால கொட்டடிக்கிகன்னு தேனி மேளகாரங்களோட கொட்டை, நொட்டம் பேசி உடைச்சிட்டார். அதுல இருந்து நாயக்கமாருக்கும் நம்மளுக்கும் திருவிழா தனித்தனியா இன்னையவரைக்கும் நடக்குது-''

''அவர் என்ன செய்வார்னா, முறைத் தண்ணிய அன்னன்னைக்குப் பாச்சமாட்டார். அன்னைக்கு எங்காவது ஊர் சுத்தப் போயிருவார். மறுநாள் மகாலிங்கம் தாத்தா முறைன்னா பிரச்னை ஆயிரும். இவுகளவுட்டு மூணாம் தாத்தா இளையவர்னா சரி போனாப் போவுதுன்னு விட்ருவார். சேட்டைக்காரப் பயல், என்ன பண்றதுன்னு. ஆனா மகாலிங்கம் தாத்தா விடமாட்டார். இந்தப் பயலைத்

# செவக்காட்டுச் சித்திரங்கள்



தட்டி வெக்கலைன்னா திருந்தமாட்டான்னு சத்தம் போடுவார்.

ஒரு வட்டம், இவர் பருத்தி போட்டுந்தார். தூங்கைய்யா மிளகாய்ச் செடி நட்டிருந்தார். வழக்கம்போல முறைத் தண்ணி பாய்ச்சுற அன்னிக்கு, வேற யாருக்கோ மாடுபிடிக்க மதுரைக்குப் போயிட்டார் தூங்கைய்யாத் தாத்தா. மறுநா மகாலிங்கத்தோட முறை.

இந்தப் பயல் நேத்து தண்ணி பாச்சலை. இன்னைக்கு நம்ம பாய்ச்சும்போது வந்து நிப்பானேனுட்டு மகாலிங்கம் தாத்தா யோசிச்சார். பருத்தி வேற காய் பிடிக்கும் நேரம். தண்ணி சரியாப் பாயாட்டி வம்பாப் போயிருமேன்னு விசனப்படுதார். நான் (சுப்பாச்சி) ஒண்ணு சொன்னேன். விடியக் காலையே போய் தண்ணி வெலக்கிருவோம்னு. அதுவும் சரிதான்னு வெள்ளனயே வண்டியக் கட்டிட்டு புருசனும் பொண்டாட்டி கிணத்துக்கு வந்தா...

உங்க சின்னத் தாத்தா எமகண்டன். கோழி கூப்பிடவே போய் கமலை இறைக்கார். ஒரு வேலைக்காரன் தண்ணி கட்டுதான். நாங்க மாட்டு வண்டிய நிப்பாட்டி மாட்டை அவுக்கும்போது, அவர் இறைக்கும் கூனை கிணத்துல, மிதி கல்லுல மோதி டங்கால் டங்கால்னு சத்தம் தெளிவா கேக்குது.

நான் பொம்பளை ஒதுங்கி நின்னுக்கிட்டேன். ஆம்பளை ரெண்டு பேரும் வாக்கு வாதம் பண்ணுதாங்க. வேலைக்காரன் முழிக்கான். 'ஏலேய், என் முறைத் தண்ணிய பாய்ச்ச வந்தா, நீ இங்க என்ன பண்ணுத நேத்து எங்க போன?'ன்னு இவர் சொல்ல, அவரு 'அவசரமாச் சோலி வந்தா என்ன செய்ய முடியும்? கொஞ்சம் முன்னப் பின்ன இருக்கத்தான் செய்யும். வேண்ணா, நீ தனிக்கெணறு அடிச்சு விவசாயம் பண்ணு'ங்காரு.

இந்தப் பய செய்யுறதயும் செஞ்சிட்டு இப்படி எகத்தாளமாப் பேசறானே, அப்படின்ட்டு, இவர் கோவணத்தைக் கட்ட, அவரும் கோவணத்தை சுத்திக்கட்ட, ரெண்டு பேரும் மல்லுக்கட்டிட்டாக.

பெரிய தாத்தாவை உங்கச் சின்ன தாத்தா தூக்கிப் போட்டு நெஞ்சுல குத்து குத்துன்னு குத்துதாரு. இதைப் பாத்திட்டு நான் கமலை வண்டி செவிப்பல கையை எடுத்திட்டு ஓடியாந்து தூங்கைய்யாவைப் பிட்டியில் அடிச்சா. ஏய் பாதகத்தி, கட்டுன புருசனையே அடிக்கியே கிறுக்கச்சின்னு எங்க வீட்டுக்காரர் சத்தம் போடுதார். என்ன விவரம்னா, மேல குத்த வெச்சு அடிக்கது எம் புருசந்தான். நான் கண்ணெழவு தெரியாம துங்கையான்னு நினைச்சு மகாலிங்கத்தையே அடிச்சுட்டேன்.

அதுல இருந்து சாகுற வரைக்கும் உங்க பெரிய தாத்தா கம்பு ஊணி பிட்டிய நெளிச்சு நெளிச்சுத்தான் நடந்தாரு. ஊரோட என்னைக் கேலி பண்ணுனாக. ஏன் சொல்தம்னா, முறைத்தண்ணிய அன்னன்னிக்கு இறைச்சிறணும். அதுக்குத்தான்''னு கதையச் சொல்லி முடிச்சா சுப்பாச்சி.

**(மண் வாசம் வீசும்)**





# வேஷங்கள்!

'நிஜம்' என்பதை 'உண்மையானது' என்று நாம் அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம். 'நிஜம்' என்பதற்கு நிஜமான அர்த்தம், 'தமக்கே உரிய சுவபாவம்', 'தம் உண்மை இயல்பு' என்பதாகும்.

இரண்டு அர்த்தத்திலும் ஆத்மாதான் நிஜ நாம். அதை அறியாத நாம் மனசின் பொய் வேஷத்தில் நம் சுவபாவத்தைத் தெரிந்துகொள்ளாமலிருக்கிறோம். மனசை நாமாகவே நினைத்துவிடுகிற அளவுக்கு அது பெரிய வேஷம் போட்டு ஏமாற்றிவிடுகிறது.

ஒரு வேஷமில்லை; மாறிக்கொண்டே இருக்கிற பல வேஷங்கள்! பழநியில் தண்டாயுதபாணிக்குக் கிடுகிடுவென்று ஓர் அபிஷேகத்துக்கு மேல், இன்னொரு அபிஷேகமாகப் பண்ணி திரைபோட்டு, அலங்காரம் பண்ணித் திறந்து காட்டுவார்கள். ஓர் அலங்காரத்திலே ஆண்டிப் பண்டாரமாக நிற்பார். கொஞ்ச நேரத்தில் இன்னொரு அபிஷேக அலங்காரமாகித் திரையை விலக்கும்போது பார்த்தால் ராஜாவாகக் காட்சிக் கொடுப்பார். அதற்கப்புறம் இன்னொரு அலங்காரத்தில் வேடரூபத்தில் தரிசனம் தருவார். அதே மாதிரிதான் நம் வேஷமும் மாறிக்கொண்டே இருக்கிறது. பிறந்ததிலிருந்து (கருவாய் உருவானதிலிருந்து, இன்னும் பின்னே போனால் எத்தனையோ ஜென்மத்துக்கு முன்னாலிருந்து) நம் உடம்பும் மனசும் மாறிக்கொண்டே இருக்கிறதென்றால், ஒவ்வொரு மாற்றமும் ஒரு வேஷந்தானே? இருந்தாலும், ஒரு துணியும் போட்டுக்கொள்ளாமல், மல-மூத்திரங்களை அடித்துக்கொண்டு, செருப்பு, துடைப்பக்கட்டை எதுவானாலும் 'ஹாவு ஹாவு' என்று கடித்துக்கொண்டு 'ஹா, ஹூ' என்று விளையாடிக்கொண்டிருந்த அந்தக் குழந்தையேதான், இன்றைக்கு எத்தனையோ நாசூக்கு நாகரிகம் பார்க்கிற 'நாம்' என்பதாக ஒரு நான் எண்ணம் - அன்றிலிருந்து இன்று வரை அறாத, மாறாத தொடரிழையாக இருந்துகொண்டேயிருக்கிறது. இந்த எண்ணத்துக்கு அடியில் நமக்கு உயிராதாரமாக இருப்பதுதான் ஆத்மா.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# இது கூட்டமல்ல...



* 'பிரிவோம் சந்திப்போம்' படத்தில் சேரன் - ஸ்நேகா

'சிவப்பதிகாரம்' மூலம் சிறப்பான கருத்தை வலியுறுத்திய இயக்குநர் கரு. பழனியப்பன், அடுத்து 'பிரிவோம் சந்திப்போம்' மூலம் உறவுகளின் ஆழத்தையும் அழகையும் வலியுறுத்த வருகிறார். அவருடனான சந்திப்பிலிருந்து...

''வித்தியாசம், புதுமை என்கிற வார்த்தைகளெல்லாம் சினிமாவில் மதிப்பிழந்துவிட்டன. இவற்றிலிருந்து விலகி, எந்தவிதத் தயக்கமுமில்லாமல் என் படம் பற்றிப் பேச முடியும். 'பிரிவோம் சந்திப்போம்' எல்லோரும் வாழ்வில் எதிர்கொள்கிற, கொண்டிருக்கிற கதை. ஒரு குடும்பம் பிரிகிறது; பின்பு சேர்கிறதா என்பதைச் சுவாரஸ்யமாகச் சொல்லியிருக்கிறோம். இதை காதல் கதை என்று யாரும் தவறாக நினைக்கவேண்டாம். படத்தில் சண்டை இல்லை; வெட்டுக் குத்து ரத்தம் இல்லை; வில்லன் - வில்லி இல்லை; இன்னும் பல இல்லை. ஆனால், அழகான ஒரு நேசம் இருக்கிறது. இழைஇழையாக உறவுகளின் உன்னதம் சொல்லப்பட்டிருக்கிறது. இது ஹீரோ ஒருவரே சுமக்கும் காரோட்டம் அல்ல... ஊர் கூடி இழுக்கும் தேரோட்டம். இசை, ஒளிப்பதிவு, திரைக்கதை என்று பல விஷயங்களில் முயற்சிகளை முன் வைத்திருக்கிறோம். அவை அங்கீகரிக்கப்படும் என்கிற நம்பிக்கை எனக்குண்டு.

**நா**ன் இயக்குநராகி நான்கு வருடங்

# தேரோட்டம்!"




கள் ஆகிவிட்டன. ஆனால், மொத்தமே நான்கு படங்கள்தான் தந்திருக்கிறேன். நிறைய படங்கள் செய்வதில் எனக்கு உடன்பாடில்லை; நிறைவாய் செய்வதையே எப்போதும் விரும்புகிறேன். ஒரு படம் முடிந்ததும் அடுத்த இரண்டு மாதங்களுக்கு எதுவும் செய்ய மாட்டேன்; யோசிப்பேன். அடுத்த கதை பற்றி முடிவு செய்ய கால அவகாசம் எடுத்துக்கொள்வேன். சிலர் கூறுவர் காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்வது நல்லதென்று. ஆனால், என் மேல் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. எனவே, நான் எதைப் பற்றியும் கவலைப் படுவதில்லை. நிச்சயமாக என்னைப் போல் யாராலும், மற்றவர்களைப் போல் என்னாலும் படமெடுக்க முடியாது.

அதேபோல் எனது இப்போதைய படம், எனது முந்தைய படங்களிலிருந்து எப்படி வேறுபடுகிறது என்று பார்ப்பேனே தவிர, அடுத்தவர் படங்கள் பற்றி எனக்குக் கவலையில்லை. சொன்னதையே திருப்பிச் சொல்ல மாட்டேன்; செய்ததையே திருப்பிச் செய்ய மாட்டேன். ஒரே வேலையை மீண்டும் மீண்டும் செய்வதாக இருந்தால் நான் ஆஃபீஸ் வேலைக்குப் போயிருப்பேன்; சினிமாவுக்கு வந்திருக்க மாட்டேன்.

டிரண்ட் என்று சொல்லப்படுகிற மாய பிம்பத்தின்மீது எனக்கு நம்பிக்கை இல்லை. சினிமாவில் சினிமாக்காரர்கள் உருவாக்கி வைத்துள்ள போலியான விஷயம் இது. அரைத்த மாவையே அரைப்பவர்கள் சொல்லும் நொண்டிச் சாக்கு. எனது முதல் படமான 'பார்த்திபன் கனவு' வந்தபோதுகூட இது ஆக்ஷன் சீசன். இப்படி ஒரு காதல் கதை இப்போது எடுபடாது என்றார்கள். ஆனால், நடந்தது என்ன? குடும்பம் குடும்பமாக மக்கள் ரசித்து ஆரோக்கியமான படமாக அங்கீகரித்தார்கள்.

சமூகத்தில் நடப்பதைத்தான் படமாக்குகிறோம் என்று சொல்லி, எங்காவது ஏதாவது வரம்பு மீறி ஒழுங்கீனமாக நடப்பதைப் படமாக்குவதும் கண்டிக்கத் தக்கது; பொறுப்பில்லாதது. எதெதை சினிமாவில் காட்டுவது என்கிற கண்ணியம் வேண்டும். வீட்டுக்கு வீடு படுக்கையறை இருக்கிறது; கழிவறையும் இருக்கிறது. அதற்காக எல்லாவற்றையும் காட்டிவிட முடியுமா? கழிவறையிலும் கதவு வைத்திருப்பது ஏன்? நல்ல விஷயம் செய்கிறோமோ இல்லையோ, கெட்டதைச் செய்யக்கூடாது என்பதில் பிடிவாதமாக இருக்கிறேன்.

ஒரு டாக்டரிடம் எங்கு வேலை செய்கிறீர்கள்? என்று யாரும் கேட்பதில்லை. 'எங்கு ப்ராக்டீஸ் செய்கிறீர்கள்?' என்றுதான் கேட்கிறோம். ஒரு டாக்டர் எப்படி காலம் முழுவதும் ப்ராக்டீஸ் செய்து கற்றுக்கொண்டே இருக்கிறாரோ, அதேபோல்தான் இயக்குநரும் - கற்றுக்கொண்டே இருக்கிறோம். எந்தப் படம் ஓடும், ஓடாது என்கிற ரகசியம் புரிபடாதது. எனக்குப் பிடித்த காட்சிகளை ரசிகர்கள் நிராகரிக்கிறார்கள். என் நிராகரிப்புகளை அவர்கள் ரசிக்கிறார்கள். எப்போது அவனும் நானும் ரசிக்கிற காட்சி உருவாகப் போகிறது என்பது சுவாரஸ்யமான விளையாட்டு. விளையாடிக்கொண்டே இருப்போம். அதில்தான் வாழ்வின் சுவைகள் அடங்கியிருக்கின்றன!''

**- மதுமிதா**



# 9. விபத்தின் காரணம்

சக்கரவர்த்தியை குந்தவி வியப்புடன் நோக்கினாள். அவளுடைய மை தீட்டிய பெரிய கண்கள் அதிசயத்தினால் விரிந்து மலர்ந்தன. "இது என்ன அப்பா, இது? கூத்தாடிகள் அல்லவா வேஷம் போட்டுக் கொள்வார்கள்? இராஜாக்களுக்கு எதற்காக வேஷம் போடும் வித்தை தெரிய வேண்டும்?" என்று கேட்டாள்.

"ஒரு தேசத்தைப் பரிபாலிப்பவனுக்குப் பல கலைகளும் தெரிந்திருக்கவேண்டும் குழந்தாய், முக்கியமாக வேஷம் போட்டுக் கொள்ளத் தெரிந்திருக்கவேண்டும். அப்போதுதான், பிரஜைகளின் மனோபாவங்களை அவ்வப்போது தெரிந்துகொள்ள முடியும். இன்னும் சத்துருக்களைப் பற்றிய இரகசியங்களையும் தெரிந்துகொள்ளலாம். நாட்டில் குற்றங்கள் நடக்காமல் தடுக்கலாம்..." என்று சக்கரவர்த்தி சொல்லி வருகையில் குந்தவி குறுக்கிட்டாள்.

"இப்போது எந்தக் குற்றத்தைத் தடுப்பதற்காக இந்த வேஷம் போட்டுக் கொண்டீர்கள்? நான் ஏதாவது குற்றம் செய்யப் போவதாகச் சந்தேகமா?" என்று சொல்லி, முல்லை மலர்வது போல் பல்வரிசை தெரியும்படி நகைத்தாள்.

"சந்தேகமில்லை, குந்தவி! நிச்சயமாகப் பெரிய குற்றம் ஒன்று நீ செய்திருக்கிறாய். உன்னால், நேற்று இராத்திரி நாலு பேருக்கு மரணம் சம்பவித்தது!" என்று சக்கரவர்த்தி சொன்னதும், குந்தவிக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"இதென்ன அப்பா! எனக்கு ஒன்றும் தெரியாதே!"

"ஆமாம்; உனக்கு ஒன்றும் தெரியாது தான். அயல்தேசத்திலிருந்து வந்த இரத்தின வியாபாரி ஒருவனை நீ அரண்மனைக்கு வரச் சொன்னாயா?"

"ஆமாம்; சொன்னேன், அது குற்றமா?"

"அவனிடம் நீ யாரென்று உண்மையைச் சொல்லாமல், குந்தவி தேவியின் தோழி என்று சொன்னதுண்டா?"

"உண்மைதான்; அதனால் என்ன?"

"அதனால்தான் ஆபத்து வந்தது. அந்த இரத்தின வியாபாரிக்கு நீதான் சக்கரவர்த்தியின் மகள் என்று யாரோ பிறகு சொல்லியிருக்கிறார்கள். அவன் இதில் ஏதோ அபாயம் இருக்கிறதென்று மிரண்டு போய்விட்டான். மிரண்டு அன்றிரவே உறையூருக்குக் குறுக்குக் காட்டுப் பாதை வழியாகக் கிளம்பிப் போனான்..."

"உறையூருக்கா?" என்று குந்தவி கேட்ட குரலில் மிக்க ஆச்சரியம் தொனித்தது.

"ஆமாம், அதில் என்ன அவ்வளவு ஆச்சரியம்?"

"இல்லை. அப்பா! இரத்தின் வியாபாரி காஞ்சிக்கு வராமல் உறையூருக்குப் போவானேன் என்று யோசித்தேன். அங்கே அரண்மனையில்கூட ஒருவரும் இல்லையே!"

"அந்த இரத்தின வியாபாரியின் தாயார் உறையூரில் இருக்கிறாளாம். அவளைப் பார்ப்பதற்காகக் கிளம்பினானாம்..."

குந்தவி ஏதோ சொல்ல வாயெடுத்தவள், பல்லைக் கடித்துக்கொண்டு மௌனமானாள். அந்த இரத்தின வியாபாரி உண்மையில் விக்கிரமன்தானோ என்று அவள் மனத்தில் தோன்றியிருந்த சந்தேகம்

அமரர் கல்கி

ஊர்ஜிதமாயிற்று. அந்தச் சந்தேகம் தன் தந்தைக்கும் ஒருவேளை தோன்றியிருக்குமோ என்று எண்ணினாள். தான் ஏதாவது பிசகாகப் பேசி, அவருடைய மனத்தில் சந் தேகத்தை எழுப்பக்கூடாதென்று தீர்மானித்துக்கொண்டாள்.

''என்ன அம்மா! யோசனை செய்கிறாய்?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''ஒன்றுமில்லை அப்பா! பழைய ஞாபகங்கள் வந்தன. உறையூருக்கு முன் தடவை நாம் போயிருந்ததை நினைத்துக்கொண்டேன். இருக்கட்டும் அப்பா! அப்புறம் அந்த இரத்தின வியாபாரியின் கதையைச் சொல்லுங்கள்'' என்றாள்.

''காட்டுப் பாதையில் இரவில் போகும்போது அவனைத் திடீரென்று நாலு பேர் வளைத்துக்கொண்டு, வாளால் தாக்கினார்கள். ஆனால், அந்த இரத்தின வியாபாரி இலேசுப்பட்டவன் அல்ல; மூன்று பேரை அவனே தீர்த்துவிட்டான். நாலாவது ஆள் இந்த வாளுக்கு இரையானான்!'' என்று சக்கரவர்த்தி தம் வாளைச் சுட்டிக்காட்டினார்.

மிகுந்த வியப்புடனும் ஆர்வத்துடனும், ''நீங்கள் எப்படி அங்கே அந்தச் சமயம் போய்ச் சேர்ந்தீர்கள்?'' என்று கேட்டாள் குந்தவி.

''இல்லாவிட்டால், இந்தப் பெரிய சாம்ராஜ்யத்தை நிர்வாகம் செய்ய முடியுமா, குழந்தாய்?''

''ரொம்பத் தற்பெருமை அடித்துக் கொள்ளாதீர்கள்! 'நரசிம்ம சக்கரவர்த்தியின் இராஜ்யத்தில் திருட்டுப் புரட்டே கிடையாது!' என்னும் கீர்த்தி என்ன ஆயிற்று? காஞ்சிக்கும் மாமல்லபுரத்துக்கும் இவ்வளவு சமீபத்தில் திருடர்கள் ஓர் அயல்தேசத்து வியாபாரியைத் தாக்குவது என்றால்...!''

''நானும் உன்னைப் போல்தான் அவர்கள் திருடர்களோ என்று முதலில் நினைத்தேன். ஆனால், உண்மையில் அவர்கள் திருடர்கள் இல்லை.''

''பின்னே யார் அவ்வளவு துணிச்சலாகக் காரியம் செய்தவர்கள்?''

''திருட்டையும் வழிப்பறியையும் காட்டிலும் பயங்கரமான விஷயம், குழந்தாய்!''

''என்ன அப்பா!''

''அந்த இரத்தின வியாபாரியை நன்றாய்ப் பார்த்தாயல்லவா?''

''பார்த்தேன்.''

''அவனைப் பார்த்தபோது உனக்கு என்ன தோன்றியது?''



# கனவு

குந்தவி மென்று விழுங்கிக் கொண்டு, ''ஒன்றும் தோன்றவில்லையே!'' என்றாள்.

''அவன் முகத்தில் இராஜகளையைக் கூடவா கவனிக்கவில்லை?'' என்று சக்கரவர்த்தி கேட்டபோது, குந்தவிக்கு அவர் விக்கிரமனைக் கண்டு பிடித்து விட்டாரோ என்ற சந்தேகத்தினால் உள்ளம் பதறியது.

சக்கரவர்த்தி அவளுடைய மறுமொழியை எதிர்பாராமலே, ''நரபலி கொடுப்பவர்களுக்கு இந்த மாதிரி இராஜலட்சணம் பொருந்தியவன் கிடைப்பது மிகவும் அருமை!'' என்றார்.

''ஐயோ!'' என்று அலறினாள் குந்தவி. ''அப்பா! நமது நாட்டில் இன்னுமா இந்தப் பயங்கரம்?'' என்று கேட்டாள்.

''ஆமாம் குழந்தாய்! இந்தப் பயங்கர மூடநம்பிக்கைகளை வேரறுப்பதற்கு முயன்றுதான் வருகிறேன். இன்னும் வெற்றி கிடைக்கவில்லை. ஓர் இடத்தில் வேரைக் களைந்தால், இன்னொரு இடத்தில் முளைத்து எழும்புகிறது.''

''பாவம்! அந்தச் சாது இரத்தின வியாபாரிக்கு இப்படிப்பட்ட ஆபத்து வந்ததே! நீங்கள் அச்சமயம் அங்கே போயிராவிட்டால் என்ன ஆகியிருக்கும்?''

''அவன் அப்படியொன்றும் சாது இல்லை, குந்தவி. அவனும் ஒரு திருடன்தான்; அதனால்தான் இத்தகைய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டான்!'' என்றார் சக்கரவர்த்தி.

**இனி குதிரை மேல் இருந்தால் தனக்கும் ஆபத்து; குதிரைக்கும் ஆபத்து என்று எண்ணமிட்டவனாய் விக்கிரமன் வெள்ளத்தில் பாய்ந்தான்!**



குந்தவிக்கு ஒரு நிமிஷம் மூச்சே நின்று விடும் போலிருந்தது.

"நிஜமாகவா, அப்பா! இந்த இரத்தினம் எல்லாம் அவன் திருடிக்கொண்டு வந்ததா?" என்று கேட்டாள்.

"இல்லை குந்தவி! அவன் இரத்தினம் திருடவில்லை. வேறொரு திருட்டுத்தனம் மாமல்லபுரத்தில் செய்யப் பார்த்தான்! நமது சிற்பிகள் சிலருக்கு ஆசைகாட்டி, அவன் வசிக்கும் தீவுக்கு அழைத்துக் கொண்டு போக முயன்றான். இது எப்பேர்ப்பட்ட குற்றம் தெரியுமா குழந்தாய்! இந்தக் குற்றத்துக்குத் தண்டனை என்ன தெரியுமா?"

"தெரியும் அப்பா!"

"ஆகையினால்தான், அவன் தன்னுடைய முயற்சி வெளிப்படாதிருக்கும் பொருட்டு மூட்டை தூக்குவதற்கு ஓர் ஊமைக் குள்ளனை வேலைக்கு அமர்த்திக் கொண்டான். ஆனால், அந்தக் குள்ளன் மேல் எனக்கு ஏற்கெனவே சந்தேகம் இருந்தது. அவன் கபாலிகர்களின் ஆள் என்று. அது உண்மையாகிவிட்டது. குள்ளன் இரத்தின வியாபாரியை ஏமாற்றி, உறையூருக்கு வழி காட்டுவதாகச் சொல்லிக் காட்டுப்பாதை வழியாக அழைத்துப் போனான். நான் மட்டும் சரியான சமயத்தில் போய்ச் சேர்ந்திராவிட்டால்...?"

சக்கரவர்த்தி யோசனையில் ஆழ்ந்தார்.

"அப்புறம் என்ன நடந்தது; அப்பா! இரத்தின வியாபாரி இப்போது எங்கே?"

சக்கரவர்த்தி, பின்னர் நடந்ததையெல்லாம் ஒருவாறு சொல்லி அவனைத் தம்முடைய குதிரை மீதே உறையூருக்கு அனுப்பி வைத்ததையும் தெரிவித்தார்.

குந்தவி சற்றுப் பொறுத்து, "இரத்தின வியாபாரி தங்களை இன்னாரென்று தெரிந்துகொண்டானா?" என்று கேட்டாள்.

"அவனுக்குத் தெரியாது. ஏன் கேட்கிறாய்?" என்றார் சக்கரவர்த்தி.

"ஒன்றுமில்லை; வேஷம் எவ்வளவு தூரம் பலித்தது என்று தெரிந்து கொள்வதற்காகத்தான்."

பிறகு குந்தவி, "அப்பா! ஒரு விஷயம் கேட்க வேண்டும் என்றிருந்தேன்" என்றாள்.

"என்ன அம்மா!"

"அண்ணா, உறையூரே பார்த்ததில்லையல்லவா? நானும் அவனும் உறையூருக்குப் போக எண்ணியிருக்கிறோம்."

"ஆகா! ஆனந்தமாய்ப் போய்விட்டு வாருங்கள். உறையூர் என்றதும் ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. நேற்று மாமல்லபுரத்தில் மாரப்ப பூபதியைப் பார்த்தேன். அவன் எங்கே வந்தான்? உனக்கு ஏதாவது தெரியுமா?"

"தெரியும்; மாரப்ப பூபதியை நானும் அண்ணாவும்தான் வரச் சொல்லியிருந்தோம்..."

"என்னத்திற்காக?" என்று சக்கரவர்த்தி அதிசயத்துடன் கேட்டார்.

"அச்சுதவர்மர் தமக்குத் தேகம் மெலிந்துவிட்டதென்றும், இராஜ்ய காரியங்களைக் கவனிக்கமுடியவில்லையென்றும் தெரிவித்தார். அதன்மேல் அண்ணா, மாரப்ப பூபதியை வரவழைத்து, அவனுக்குச் சோழ நாட்டின் சேனாதிபதி பதவியைத் திரும்பவும் கொடுத்திருக்கிறான்."

"ஓகோ!" என்றார் சக்கரவர்த்தி. மறுபடியும் அவர் யோசனையில் ஆழ்ந்தார். பிறகு அவருடன் பேசுவதில் பயனில்லை

**நரசிம்ம பல்லவர், வாதாபிக்குப் படை எடுத்துச் சென்ற காலத்தில் ஒரு முறையும், தமிழகத்தில் கொடும் பஞ்சங்கள் தோன்றி பிரஜைகளை வருத்தின!**

யென்று, குந்தவி யாழை எடுத்துச் சோகம் பொருந்திய இசையை எழுப்பலானாள்.

## 10. காட்டாற்று வெள்ளம்

சென்ற அத்தியாயங்களின் சம்பவங்களும், சம்பாஷணைகளும் வாசகர்களில் சிலருக்கு விசித்திரமாய்த் தோன்றுவதுடன், சில விஷயங்கள் விளங்காமலும் இருக்கலாம். நரபலியாவது, மண்டையோடாவது, இதென்ன அருவருப்பான விஷயம்! - என்று தோன்றலாம். ஆனால், நமது தமிழகத்தின் அந்தக் காலத்துச் சரித்திரத்தை ஆராய்ந்தவர்களுக்கு வியப்பு ஒன்றும் இராது. அருவருப்பாயிருந்தாலும், உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமல்லவா?

மகேந்திர பல்லவர் காலத்திலும் நரசிம்மவர்மரின் காலத்திலும், தமிழ்நாட்டில் சைவமும் வைஷ்ணவமும் தழைத்து வளர்ந்தன. இவ்விரண்டு சமயங்களும் அன்பையும் ஜீவகாருண்யத்தையும் அடிப்படையாகக் கொண்டவை. அப்போது தேய்ந்துபோய்க்கொண்டிருந்த ஜைன, பௌத்த சமயங்களின், நல்ல அம்சங்களெல்லாம் சைவ - வைஷ்ணவ மதங்களில் ஏற்கப்பட்டிருந்தன. அவற்றுடன் சிவபக்தியும், கண்ணன் காதலும் சேர்ந்து தமிழ்நாட்டைத் தெய்வத் திருநாடாகச் செய்து வந்தன. அப்பர், சம்பந்தர் முதலிய சைவ சமயக் குரவர்களும், வைஷ்ணவ ஆழ்வார்களும் தெய்வீகமான பாடல்களைப் பாடி, நாடெங்கும் பக்தி மதத்தைப் பரப்பி வந்தார்கள். சிவன் கோயில்களும் பெருமாள் கோயில்களும் அற்புத சிற்பக் கனவுகளைப் போல் தோன்றி வளர்ந்து வந்தன.

ஒருபுறம் இப்படிப்பட்ட அன்பு மதங்கள் பெரும்பாலான ஜனங்களிடையே பரவி வருகையில், மிகச் சிலரான மக்களிடையே நரபலியைத் தூண்டும் பயங்கரமான கபாலிகம், சாக்தம், பைரவம் என்னும் மதங்கள் எப்படியோ இரகசியமாக வேரூன்றி வந்தன. இந்த மதங்களை அவலம்பித்தவர்கள் மித மிஞ்சிய மூடபக்தியை வளர்த்தார்கள். மூடபக்தி காரணமாக அவர்கள் காளிகோயில்களிலும் துர்க்கை கோயில்களிலும், தங்களுடைய சிரங்களைத் தாங்களே அநாயாசமாக வெட்டி எறிந்துகொண்டார்கள்! இப்படித் தங்களைத் தாங்களே பலி கொடுத்துக் கொள்வதால், அடுத்த ஜன்மத்தில் மகத்தான பலன்களை அடையலாமென்று நம்பினார்கள். இம்மாதிரி நம்பிக்கைகளை வளர்ப்பதற்குப் பூசாரிகளும் இருந்தார்கள். ஆங்காங்கு அடர்ந்த காடுகளிலும், மனிதர்கள் எளிதில் புகமுடியாத மலைப் பிராந்தியங்களிலும் காளி கோயில்களையும், துர்க்கை கோயில்களையும் இவர்கள் நிறுவினார்கள்.

மகேந்திர பல்லவரின் காலத்தில் வடக்கே வாதாபியிலிருந்து புலிகேசி என்பவன் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்தபோது, அவனுடைய சைன்யங்களுடனே மேற்கூறிய பயங்கர மதங்களும் தமிழ் நாட்டில் புகுந்தன. பிறகு, புலிகேசி திரும்பிப்போன அடியோடு ஒரு முறையும், நரசிம்ம பல்லவர் வாதாபிக்குப் படையெடுத்துச் சென்ற காலத்தில் ஒரு முறையும், தமிழகத்தில் கொடும் பஞ்சங்கள் தோன்றி ஜனங்களை வருத்தின. இந்தக்



காலங்களில் மேற்கூறிய நரபலி மதங்கள் அதிகமாக வளர்ந்தன.

இந்த மூட மதங்களை வேரோடு களைவதற்கு நரசிம்ம சக்கரவர்த்தி பெரும் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தார். குருட்டு மதநம்பிக்கையை ஒழிப்பதற்குத் தண்டோபாயம் மட்டும் பயன்படாது என்று அவருக்குத் தெரிந்திருந்தது. தங்களுடைய கழுத்தைத் தாங்களே வெட்டிக் கொள்ளச் சித்தமாயிருப்பவர்களை எந்த விதத்தில் தண்டிக்க முடியும்? ஆகையால் தான், அவர் சென்ற இரண்டு வருஷமாகத் தமது மூத்த குமாரனிடம் இராஜ்ய பாரத்தை ஒப்புவித்துவிட்டுத் தாம் மாறு வேடம் பூண்டு, நாடெங்கும் சஞ்சரித்து, மேற்படி மதங்கள் எவ்வளவு தூரம் பரவியிருக்கின்றன, எங்கெங்கே அந்த மதங்களுக்கு வேர் இருக்கிறது என்பதையெல்லாம் கண்டுபிடிப்பதில் ஈடுபட்டிருந்தார். இதனாலேதான் விக்கிரமனுக்கு நேர்வதற்கிருந்த பேராபத்திலிருந்து அவனைச் சக்கரவர்த்தி காப்பாற்றுவதும் சாத்தியமாயிற்று.

ஆனால், விக்கிரமனோ தனக்கு நேர இருந்த அபாயம் எப்படிப்பட்டதென்பதை அறிந்துகொள்ளவில்லை. தன்னைத் திருடர்கள் தாக்கியதாகவே அவன் எண்ணியிருந்தான். ஒற்றர் தலைவனிடம் விடைபெற்று அவனுடைய குதிரை மீது ஏறிச் சென்ற விக்கிரமனுடைய உள்ளத்தில், பலவிதமான எண்ணங்கள் அலை மேல் அலை எறிந்து கொந்தளித்துக்கொண்டிருந்தன. அன்னையைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை அவனுடைய உள்ளத்தில் முதன்மையாக இருந்தது. ஒற்றர் தலைவனின் உயர்ந்த ஜாதிக் குதிரை எவ்வளவோ விரைவாகச் சென்றும், அவனுடைய உள்ளத்தின் வேகம் காரணமாக, "குதிரை இன்னும் வேகமாய்ப் போகக் கூடாதா?" என்று தோன்றியது.

பிறகு, அந்த ஒற்றர் தலைவனின் கம்பீரத் தோற்றமும் அவன் மனக் கண்முன் அடிக்கடி வந்தது. அவன் தனக்குச் செய்த உதவியை நினைத்தபோது அளவில்லாத நன்றி உணர்ச்சிகொண்டான். இடையிடையே ஒரு சந்தேகமும் உதித்தது. அவ்வளவு அறிவுக் கூர்மையுடைய ஒற்றர் தலைவன், தன்னுடைய இரகசியத்தை மட்டும் கண்டுபிடிக்காமலிருந்திருப்பானா? ஏதோ ஒரு பெரிய சூழ்ச்சியில் தன்னை அகப்படுத்துவதற்காக இப்படி குதிரையைக் கொடுத்து அனுப்பியிருக்கிறானோ?

பின்னும், ஒற்றர் தலைவன் கூறிய நரசிம்ம சக்கரவர்த்தியின் இளம்பிராயத்துக் காதல் கதை அவனுக்கு அடிக்கடி நினைவு வந்தது. காட்டின் மத்தியில் இருந்த சிற்பியின் வீட்டில், சிவகாமி நடனமாடுவதும், அதைப் பார்த்துப் பார்த்து சிற்பி சிலை அமைப்பதும், இதையெல்லாம் நரசிம்ம வர்மர் பார்த்துக் களித்துக்கொண்டிருப்பதுமான மானஸீகக் காட்சியில் அவன் அடிக்கடி தன்னை மறந்தான்.

இவ்வளவுக்கும் நடுவில், பல்லக்கில் இருந்தபடி தன்னை ஆர்வம் ததும்பிய பெரிய கண்களால் விழுங்கிவிடுபவள் போல் பார்த்த பெண்ணின் பொன்னொளிர் முகமும் அவன் மனக்கண் முன் அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது. அவ்வளவு அழகு ததும்பும் முகத்தையுடையவளின் நெஞ்சில் வஞ்சனை இருக்கமுடியுமா? ஒரு நாளுமிராது. ஆனால், அவள் யார்? சக்கரவர்த்தியின் மகளா? அல்லது தோழிப்

**ஒற்றர் தலைவன் கூறிய, நரசிம்ம சக்கரவர்த்தியின் இளம்பிராயத்துக் காதல் கதைகள் விக்கிரமனுக்கு அடிக்கடி நினைவு வந்தது!**

பெண்ணா?

இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டும், இடையிடையே ஊர் கண்ட இடங்களில் இது சரியான வழிதானா என்று கேட்டுக்கொண்டும் விக்கிரமன் போய்க் கொண்டிருந்தான். ஒற்றர் தலைவன் கூறிய படியே குதிரை தானாகவே சரியான உறையூர்ப் பாதையில் போய்க்கொண்டி ருந்தது, அவனுக்கு மிகுந்த வியப்புடன் மகிழ்ச்சியும் அளித்தது. இதனால் ஒற்றர் தலைவனிடம் அவனுடைய நம்பிக்கையும் மரியாதையும் அதிகமாயின. அவன் கண்டிப்பாகச் சொல்லியிருப்பதை நினைத்து, இரவிலே பிரயாணம் செய்யக் கூடாதென்றும், இருட்டு கிற சமயத்தில், ஏதேனும் ஒரு கிராமத்துச் சத்திரத்தில் தங்கவேண்டுமென்றும் எண்ணிக்கொண்டே சென்றான். ஆனால், சூரியன் அஸ்தமிப்பதற் குக் கொஞ்ச நேரம் முன்ன தாகவே அவனுடைய பிரயாணத்துக்கு ஒரு பெரிய தடங்கல் ஏற்பட்டு விட்டது.



திடீரென்று கிழக்கே வானம் கருத்தது. கருமேகங்கள் குமுறிக் கொண்டு மேலே வந்தன. குளிர்ந்த காற்று புழுதியை அள்ளி வீசிக்கொண்டு அடித் தது. தூரத்தில் மழை பெய்து தரை நனைந்த தினால் கிளம்பிய மணம் பரவி வந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் மழையே வந்து விட்டது. அற்பசொற்பமாக வரவில்லை; இடியும் மின்னலுமாய் நாலு புறமும் இருண்டு கொண்டு வந்து 'சோ' என்று சோனா மாரியாகப் பொழிந்தது. வானம் திடீரென்று பொத்துக்கொண்டு, வெகுநாள் தேக்கி வைத்திருந்த ஜலத்தையெல்லாம் தொபதொபவென்று பூமியில் கொட்டுவது போலிருந்தது.

சொட்ட நனைந்து குளிரால் நடுங்கிய விக்கிரமன், ஒரு மரத்தடியில் சற்று நேரம் ஒதுங்கி நன்று பார்த்தான். மழை நிற்கும் வழியா யில்லை. நேரமாக ஆக இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. இந்தக் கன மழையோடு இரவின் அந்தகாரம் சேர்ந்துவிட் டால் கேட்க வேண்டிய தில்லை. எனவே, எப்படியாவது மேலே போகவேண்டியதுதான் என் றும், கிராமம் அல்லது கோவில் ஏதாவது தென் பட்டதும் அங்கே தங்கி விடலா மென்றும் எண்ணி விக்கிரமன் குதிரையை மேலே செலுத்தினான்.

சற்று நேரத்துக்கெல் லாம் ஒரு காட்டாறு குறுக்கிட்டது. பார்க்கும் போது தண்ணீர் முழங் காலளவுதான் இருக்கு மென்று தோன்றியது. காட்டாற்றில் மளமள வென்று வெள்ளம் பெருகி விடுமாதலால், சீக்கிரம் அதைத் தாண்டி விடுவதே நல்லது என்று நினைத்து விக்கிரமன் குதிரையை ஆற்றில் இறக்கினான். கொஞ்சதூரம் போனதும், பிரவாகத்தின் வேகம் அதிகரித்தது. குதிரை வெள்ளத்தின் குறுக்கே போகமுடியாமல் நீரோட்டத் துடன் போகத் தொடங்கியது. பிரவாகமோ நிமிஷத்துக்கு நிமிஷம் பெருகிக்கொண்டி ருந்தது. முன்னால் போகலாமா பின்னால் திரும்பிக் கரையேறி விடலாமா என்று விக்கிரமன் சிந்தித்துக்கொண்டிருக்கை யிலேயே, குதிரை பிரவாகத்தில் நீந்த வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. இனி குதிரை மேல் இருந்தால் தனக்கும் ஆபத்து, குதிரைக்கும் ஆபத்து என்று எண்ணமிட்டவனாய் விக்கிரமன் வெள் ளத்தில் பாய்ந்தான்.

(தொடரும்)

**அரசியல் கட்சிகளின் பேரணி, ஊர்வலங்களில் போலீஸ் தடியடி, லாக் - அப் மரணங்கள், மலைவாசிப் பெண்களிடம் பாதுகாப்புப் படை அத்துமீறல் இப்படிப்பட்ட சம்பவங்கள் எது நடந்தாலும் மனித உரிமை ஆர்வலர்கள் மனித உரிமை ஆணையத்திடம் புகார் செய்வது வாடிக்கையாகிவிட்டது.**

★ 1993-ஆம் வருடம் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட, மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டவைதான், தேசிய மனித உரிமைகள் ஆணையம் மற்றும் மாநிலங்களில் உள்ள மனித உரிமை ஆணையங்கள்.

★ நமது அரசியல் சட்டம் தனிமனித உரிமைகளுக்கு முன்னுரிமை கொடுக்கிறது. தவிர, ஐக்கிய நாடுகள் சபை வரையறுத்துக் கொடுத்திருக்கும் மனித உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டும்.

★ மனித உரிமை மீறல்கள் அல்லது அதற்குத் தூண்டுதலாக உள்ள அம்சங்கள் குறித்து ஆணையம் விசாரிக்கும். உரிமை மீறல்களுக்குக் காரணமான அரசு அதிகாரிகள் பாதுகாப்பு அதிகாரிகள் ஆகியோர் மீதும், அரசிடம் சொல்லி நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் இதற்கு உண்டு.

★ மிகவும் வருந்தத்தக்க விஷயம், தனி மனிதன் மீது உரிமை மீறல்கள் நடத்துவதில் அரசு அமைப்புகளே முதலிடம் வகிக்கின்றன. குறிப்பாக, காவல் துறை சட்டத்தின் வரம்பை மீறி மனிதாபிமான மற்ற செயல்களில் ஈடுபடுவது குறித்து தான் நிறைய புகார்கள்.

★ பாதிக்கப்பட்டவர் புகார் கொடுக்கலாம் அல்லது யார் வேண்டுமானாலும் அவர் சார்பில் புகார் கொடுக்கலாம். தவிர, ஆணையமே புகார் எதுவும் இல்லாமல் தன்னிச்சையாகவும் உரிமை மீறல் பற்றி விசாரிக்கலாம்.

★ இந்தியாவில் எந்த நீதிமன்றத்திலும், உரிமைகள் மீறல் தொடர்பான வழக்குகளில், நீதிமன்ற ஒப்புதலுடன் ஆணையங்கள் தலையிட முடியும்.

# உரிமை உணர்த்தும் உண்மை!



★ சிறைச்சாலை, காவல் நிலையங்கள் ஆகியவற்றுக்கு விசிட் செய்து, அங்கிருக்கும் குறைகளை அரசுக்கு அறிக்கை கொடுத்து, மேல்நடவடிக்கைகள் எடுப்பதற்கு ஆணையத்துக்கு அதிகாரம் உண்டு.

★ தன்னிடம் வரும் புகார்களை விசாரிக்க, ஒரு சிவில் நீதிமன்றத்துக்கு என்னென்ன அதிகாரங்கள் உண்டோ, அத்தனையும் மனித உரிமை ஆணையத்துக்கு உண்டு.

★ மனித உரிமை மீறல்களால் பாதிக்கப்பட்ட நபருக்கு நிவாரணப் பணம் வழங்கச் சொல்லி மத்திய, மாநில அரசுகளுக்கு ஆணையம் உத்தரவிடலாம்.

★ ஆணையம் அனுப்பும் புகார்களைக் குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் விசாரித்து அரசு அறிக்கை அனுப்ப வேண்டும்.

★ இராணுவம் மனித உரிமை மீறல்களில் ஈடுபட்டால், அது பற்றியும் விசாரித்து, அரசிடம் ஆணையம் நடவடிக்கைக்காகப் பரிந்துரை செய்யும்.

★ மனித உரிமைகள் ஆணையத்திடம் புகார் செய்ய கட்டணம் எதுவும் கிடையாது.

★ புகார் அனுப்பும்போது, முகவரியுடன் அனுப்ப வேண்டும். மொட்டைக் கடிதங்கள் ஏற்கப்படாது. புகாரை நிரூபிப்பதற்கான ஆதாரங்களையும் இணைக்க வேண்டும். சாட்சிகளைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தால், அவர்களிடம் பிரமாண வாக்குமூலங்களையும் வாங்கி இணைத்து அனுப்பலாம்.

★ மாநில ஆணையங்களில் நிலுவையில் உள்ள விஷயங்களை தேசிய ஆணையம் விசாரிக்காது. அதுபோல தேசிய ஆணையத்தில் விசாரிக்கப்படும் புகார்களைப் பற்றி, தனியாக மாநில ஆணையங்களிலும் புகார் செய்யக்கூடாது.

★ ஆணையம் ஒரு புகாரைப் பற்றி விசாரிக்கும்படி அரசு அதிகாரிக்கு உத்தரவிடலாம் அல்லது நியமிக்கலாம்.

★ மனித உரிமை மீறல் குறித்து மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டும் பணியையும் ஆணையங்கள் மேற்கொள்ளும்.

★ தேசிய ஆணையத்தில் ஓய்வுபெற்ற உச்சநீதிமன்ற நீதிபதியும், மாநில ஆணையங்களில் ஓய்வுபெற்ற உயர்நீதிமன்ற நீதிபதியும் தலைவராக இருப்பார்கள்.

★ மனித உரிமை ஆணையங்கள் நியமிக்கப்பட்ட பிறகு, பல பிரச்னைகளில் நிவாரணம் கிடைத்திருந்தாலும், ஆணையங்களுக்கு, தண்டனை கொடுக்கும் அதிகாரம் இல்லை. அந்த அதிகாரமும் கொடுத்தால்தான் அன்றாடம் நடந்துவரும் உரிமை மீறல்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க முடியும் என்பது மனித உரிமை ஆர்வலர்களின் கருத்து.

– கௌசி






"நாங்கெல்லாம் அந்தக் காலத்துல பத்து கிலோமீட்டர் நடந்தே போய்தான் படிச்சோம்!"

"அப்ப உங்களுக்கும் படிப்புக்கும் ரொம்ப தூரம்னு சொல்லுங்க!"

- கே.பிரபாகரன்



"டிக்கெட் வாங்காம பயணம் பண்ணுறது சட்டப்படி குற்றம்னு உனக்குத் தெரியுமா?"

"தெரியும்ங்க!"

"தெரிஞ்சுக்கிட்டே ஏன் டிக்கெட் இல்லாம பயணம் பண்ணுற?"

"ஊருக்குப் போறதுக்குத்தான் சார்!"

- அரிசி ஸ்ரீராம்

# ஒன்பது ரூபாய் நோட்டு



"அவர் போலி டாக்டர்னு எப்படிச் சொல்ற?"

"மருந்துசீட்டுல பாம்பு மாத்திரையையும் சேர்த்து எழுதிக் கொடுத்தாரா பாரேன்!"

- டேவிட் ராய்

"உங்க அம்மா பெயர் என்னன்னு கேட்டா, டபுள் டிகிரின்னு சொல்றியே! எப்படி?"

"எங்க அம்மா பெயர் BAMA வாச்சே!"

- சீர்காழி எஸ்.புவனா





"செல்ஃபோனை தப்பும் தவறுமாய் 'சொல்ஃபோன்' 'சொல்ஃபோன்' என்று பேசுறாரே, யார் இந்த ஆசாமி?"

"அவரா? தமிழ் வாத்தியாருங்க."

- ஆர்.கே.லிங்கேசன்



"உங்க வீட்டுக்காரரை கொள்ளைக் காரங்க அடிக்கும்போது, பியூட்டி பார்லருக்கு ஏன் போனீங்க?"

"டி.வி., பத்திரிகை எல்லாத்துலயும் என்னோட போட்டோ வருமே அதுக்குத்தான்."

- ச.ஆ.கேசவன்

# கொடுங்க..!

"கேஷியருக்கும் கஸ்டமருக்கும் என்ன தகராறு?"

"கஸ்டமர், ஒன்பது ரூபாய் நோட்டு கொடுத்தாத்தான் போவேன்கறாராம்."

- விஜயம்



"அரசே, தங்களது கடைசி ஆசை என்ன?"

"ஏன் தளபதி? இந்தத் தடவை நான் புறமுதுகிட்டு ஓட சான்ஸ் இல்லையா?"

- அ.சுஹைல் ரஹ்மான்





# அசத்தல் வசந்தா!



* வசந்தா

"விவசாயியும் நானே; வியாபாரியும் நானே! வேறென்ன வேணும் வாழ்க்கையிலே!"

சுற்றுவட்டார கிராமத்து வீதிகளில் அந்தப் பெண்ணின் குரல் ஓங்கி ஒலிக்கிறது. 'கத்தரிக்கா... வெண்டைக்கா... தக்காளீ...!' குரல் கேட்டு, சோம்பல் முறித்துப் புத்துணர்ச்சி ஆகிறது கிராமம். சைக்கிள் மிதித்து ஒவ்வொரு ஊராகச் சென்று காய்கறி விற்கிறார் வசந்தா. இவர் ஒரு முழுநேர விவசாயி. புதுக்கோட்டை மாவட்டம் கோட்டைக்காரன்பட்டியைச் சேர்ந்தவர்.

"பதினாறு வயசுலேயே என்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தாங்க. எட்டு வருசம் ஆவுது. ரெண்டு புள்ளைங்க. என் கணவர் அருமைதுரை. கல்யாணம் ஆன புதுசுல கொஞ்சோண்டு தோட்டத்தை வெச்சுக்கிட்டு கூலி வேலைக்குப் போய்ட்டு இருந்தாரு. இது நமக்குச் சரிப்பட்டு வராதுன்னு. என் கணவர்கிட்ட, 'நீங்க ஏதாவது கம்பெனி வேலைக்குப் போங்க. நான் தோட்டத்தைப் பார்த்துக்கறேன்'னு சொல்லிட்டேன்.

இப்போ கம்பெனி வேலைக்குப் போய்ட்டு வர்றாரு. நான் தோட்டத்துல விவசாய வேலை பார்க்க ஆரம்பிச்சேன். மாடு பூட்டி நானே ஏர் ஓட்டுவேன்; களை வெட்டுவேன்; களை பறிப்பேன். கேணி பம்பு செட் இருக்கு. நானே தண்ணி பாய்ச்சுவேன்; அப்பத்தான் எனக்கு ஒரு ஐடியா தோணுச்சு... தோட்டத்துல காய்கறி போட்டு, 'நாமளே ஒவ்வொரு ஊராப் போயி வித்துட்டு வந்தா என்ன'ன்னு.

காய்கறிகள் பயிர் பண்ண ஆரம்பிச்சேன். நல்ல விளைச்சல். சைக்கிள் கேரியர்ல கூடையில கட்டிக்கிட்டு வியாபாரத்துக்குக் கிளம்பிட்டேன். கடைகள்ல விக்கறதைவிட கிலோவுக்கு மூணு, நாலு ரூபாய்க்குக் கொறைச்சு விற்பேன். நானே உற்பத்தி பண்றதால, கம்மி விலை எனக்குக் கட்டுப்படியாகும். ஜனங்களுக்கும் குறைஞ்ச விலையில் காய்கறி கிடைக்குறதுனால நல்லா வாங்கினாங்க.



* காய்கறி விற்பனையின்போது...

எந்த ஊருக்குப் போனாலும், எல்லா காய்கறியும் உடனே வித்துப்போயிடும்.

இயற்கை உரம்தான் எல்லாத்துக்கும் போடறேன். இந்த வேலை எனக்கு ரொம்ப மன நிறைவைத் தருது. இதைவிட வேறென்ன வேணும் வாழ்க்கையிலே!" என்று புத்துணர்ச்சியோடு கேட்கிறார் கோட்டைக் காரன்பட்டி வசந்தா.

செய்தி, சித்திரம் : ஸ்ரீ அரசு





புத்தாண்டு, பொங்கல் நல்வாழ்த்துக்கள்

மகிழ்வித்து மகிழுங்கள்.

ஆதரவற்ற பெண் குழந்தைகளின் புகலிடம்

வேதாரண்யம்

# கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்

## வேண்டுகோள்

பேரன்புடையீர்;

கல்விபயிலும் ஏழை, எளிய, ஏதிலிச் சிறுமியருக்கு உதவுங்கள்.

கடை கோடி கிராமப்புறத்தில் காந்தியச் செம்மல் வேதாரண்யம் உப்பு சத்யாகிரஹ தியாகி சர்தார் வேதரத்னம் அவர்களும் அவர்தம் ஒரே மைந்தர் பத்மஸ்ரீ வே. அப்பாகுட்டி அவர்களும் இந்திய சுதந்திரத்திற்கு முன்பே (1946) காந்தி அடிகளின் ஆசியுடன் தொடங்கிய மகளிர் தொண்டு நிறுவனமான கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் என்ற எளிய சமுதாயத்தில் வாழும் சுமார் 3,000 பெண் குழந்தைகள் சார்பில் இந்த வேண்டுகோளை வைக்கிறோம்.

பெருந்தலைவர்களான, பூஜ்ய விநோபாபாவே தொடங்கி வைத்த கோசாலை, பாரத ரத்தினங்கள் ராஜாஜி தொடங்கி வைத்த அன்னபூர்ணாலயம், முதல் பார்லிமெண்ட் சபாநாயகர் ஜி.வி. மாவ்லங்கர் தொடங்கி வைத்த கலைமகள் நிலையம், சி.சுப்ரமண்யம் அவர்கள் தொடங்கி வைத்த நசிகேத நிவாஸ், காமராஜ், ஆர். வெங்கட்ராமன் ஆகியோர் தொடங்கி வைத்த குடிநீர் திட்டம், மஹாத்மாவின் பேரன் துஷார் காந்தி, மத்ய அமைச்சர்கள் ப.சிதம்பரம், EVKS இளங்கோவன், G.K. வாசன், இராஜாஜியின் பேரன் C.R. கேசவன் ஆகியோர் தொடங்கிய பேக்கரி, மருத்துவமனை ஆகியவற்றை பெற்று அவர்கள் நல் ஆசியுடன் காந்திய வழியில் வாழ பயிற்சி எடுக்கிறோம்.

கிராமப்புற ஏழை எளிய ஏதிலி அகதிப் பெண் குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, இருப்பிட வசதி, கல்வி, தொழிற்கல்வி, (ஆஃப்செட் அச்சுப்பள்ளி, தொலைக்காட்சி கட்ட - பழுது நீக்க, கம்யூட்டர் கட்ட - பழுதுநீக்க, மின்னணு சாதனங்கள் செய்ய, சிவில் ட்ராப்ட்ஸ்மன், ரேடியோ டிவி, ஆடை தயாரித்தல், பசு பராமரித்தல், சித்தவைத்யம், ஊதுவத்தி, செவிலியர், பேக்கரி, அலுவலக நிர்வாகம் போன்ற பயிற்சிகள்) ஆகியன அளித்து 61 ஆண்டுகளாக ஆதரிக்கும் குருகுலம் மகளிர் தொண்டு நிறுவனத்திற்கு ஆதரவு தாருங்கள்.

ஆதரவற்ற பெண்களின் வாழ்வில் மகிழ்ச்சி, மலர்ச்சி, வாழ்க்கையில் பிடிப்பு ஆகியன ஏற்படுத்தித்தர உங்களுடைய, தங்கள் அன்பர்களுடைய அன்பளிப்புகளை, நன்கொடைகளைப் பொருளாகவோ, தொகையாகவோ அனுப்பி உதவுங்கள். ஆதரியுங்கள். மகிழுங்கள்.



நிறுவனர்
அமரர்.
சர்தார்.
**வேதரத்னம்**
தபால்தலை


முகவரி: கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் தேசிய விருது பெற்ற மகளிர் தொண்டு நிறுவனம் த.பெ.எண்.2. வேதாரண்யம் - 614 810.
நாகப்பட்டினம் மாவட்டம் போன்:(04369)250227, 250027,250011
தந்தி : GURUKULAM. VEDARANIAM -614 810.
www.gurukulam.org E mail: gurukulam vdm @ g mail.com


அரசு சலுகை: உள்ளாட்சி, கதர், அரசு நிறுவனங்கள், திருக்கோயில்கள், கல்வி நிலையங்கள், விலைப்புள்ளி கோராமல் குருகுல அச்சகத்திற்கும், குருகுல எலக்ட்ரானிக்ஸ்க்கும், வேலை கொடுக்கலாம். விற்பனை வரி கிடையாது

Govt.of India வெளிநாட்டு உதவி பெற அனுமதி. FCRA No. 075960069

கொடுத்தால் வரும்



# வாத்தியாரிடம் சொன்னியா பாபு..?

**கா**வல் துறையில் புத்துணர்ச்சி என்றால் நினைவுக்கு வருவது ஒன்றிரண்டு பேர்தான். அதில் முதல் வரிசையில் வருபவர் தமிழகக் காவல் துறை ஐ.ஜி. சைலேந்திரபாபு.

''மனிதனுக்கு ஒவ்வொரு நொடியிலும் தேவையானது புத்துணர்வு. அதுதான் அவனை வாழ்வில் உயரே உயரே இட்டுச்செல்லும் உந்துசக்தியாக இருக்க முடியும்'' என்று . கூறும் சைலேந்திரபாபு, தமது கருத்துக்களை நம்மிடம் பகிர்ந்துகொண்டார்.

''1996ல் நான் சிவகங்கை மாவட்ட எஸ்.பி.யாக இருந்தபோது, பத்தாம் வகுப்புப் பொதுத் தேர்வில் மாவட்ட அளவில் முதல் மூன்று இடங்கள் பெறும் போலீஸ்காரர்களின் பிள்ளைகளுக்குப் பரிசுகள் அறிவித்து, முதல் மதிப்பெண் பெற்றிருந்த மாணவிக்கு இரண்டாயிரம் ரூபாய் பரிசு தந்தேன். 'சாதாரண போலீஸ்காரரின் பிள்ளை, எம்.பி.பி.எஸ். சீட் பெறுமளவுக்குத் தம் கல்வித் தரத்தை உயர்த்திக் கொள்ள வேண்டும்!' என்றும் அந்தக் கூட்டத்தில் பேசினேன். திருநெல்வேலி மருத்துவக் கல்லூரி மாணவியிடமிருந்து 1999ல் எனக்கு ஒரு கடிதம் வந்தது. என்னிடம் முதல் பரிசு பெற்றிருந்த மாணவி எழுதி அனுப்பிய கடிதம்தான் அது என்று படித்ததும் புரிந்தது. சிவகங்கை கூட்டத்தில் நான் பேசிய பேச்சு தமக்குத் தூண்டுகோலாக இருந்தது எனக் குறிப்பிட்டிருந்தார்.

இது போன்று என் பேச்சால், எண்ணங்களால் புத்துணர்ச்சி அடைந்தவர்கள், என்னைச் சந்தித்து நன்றி சொல்லும்போது என் மனம் புத்துணர்ச்சி அடைகிறது.

ஆனால், என் பள்ளி நாட்களில் தம்முடைய செயலால், பேச்சால் என்னைக் கட்டிப்போட்டவர் என்

கணித ஆசிரியர் ராமசாமி. குமரி மாவட்டம் குழித்துறை அரசு உயர்நிலைப் பள்ளியின் என்.சி.சி. ஆஃபீஸர்களில் அவரும் ஒருவர். என்.சி.சி. சீருடையணிந்து அவர் நடந்து வந்தாலே, அத்தனை கம்பீரமாக இருக்கும். அதனைக் காண்பவர்களுக்கு, நாமும் அதுபோல சீருடை அணிய வேண்டும் என்கிற புத்துணர்ச்சியினைத் தூண்டிவிடும்.

**நா**ன் எட்டாம் வகுப்புப் படித்த போதே வாட்டசாட்டமாக இருப்பேன். திடீரென ஒரு நாள் என்னை என்.சி.சி. அறைக்கு அழைத்துப் போனார் ராமசாமி சார். என்.சி.சி. மாணவருக்கு உரித்தான தொப்பி, சீருடை மற்றும் பூட்ஸ்களை அணிவித்தார். உடனே விறைப்பாக நின்று சல்யூட் மரியாதை செய்தேன். அப்பொழுதே எதிர்காலத்தில் நிச்சயமாக நாம் உயர் போலீஸ் அதிகாரியாக வர வேண்டும் என்கிற வைராக்கியம், விதையாக விழுந்தது என் மனசுக்குள்.

**என் பேச்சால், எண்ணங்களால் புத்துணர்ச்சி அடைந்தவர்கள், என்னைச் சந்தித்து நன்றி சொல்லும்போது மனம் புத்துணர்ச்சி அடைகிறது!**



ஒன்பது-பத்து வகுப்புகளில் மூத்த என்.சி.சி. மாணவர் எனும் உயர்ந்த பதவி எனக்குக் கிட்டியது. பின்னர், மதுரை வேளாண்மைக் கல்லூரியில் பயின்றபோதும், என்.சி.சி. மாணவர்களின் சீனியர் அண்டர் ஆபீசர் என்கிற உயர்ந்த அந்தஸ்து கிடைத்தது. எம்.எஸ்.சி. அக்ரி தேர்ச்சி பெற்று வங்கி அதிகாரியாகப் பணியில் சேர்ந்தேன். ஏனோ அங்கு எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. என்.சி.சி. உடையும், காவல் துறை உயர் அதிகாரி யூனிஃபார்ம் உடையும் கனவுகளில் என்னை வந்து இம்சித்தன. உடனடியாக ஆவன செய்தேன்.




**1987**ல் ஐ.பி.எஸ். தேர்வில் தமிழ்நாட்டில் முதல் மாணவனாகத் தேர்ச்சி பெற்றேன். இதனை ராமசாமி ஆசிரியரிடம்தான் முதலில் தெரிவிக்க வேண்டுமென முடிவு செய்து, மோட்டார் சைக்கிளில் நூறு கி.மீ. தூரம் பறந்து வந்து அவர் வீட்டுக்குப் போனேன்; அடுத்துதான் என் வீட்டுக்கே போனேன். என் அம்மாவிடம் தகவல் சொன்னதும் 'மொதல்ல நம்ம ராமசாமி வாத்தியார் வீட்ல போயி சொல்லிட்டு வந்தியா பாபு?' என்றுதான் கேட்டார். அந்த அளவுக்கு என்னுடைய மாணவப் பருவத்திலிருந்தே எனக்குப் புத்துணர்ச்சி ஊட்டியவர் ராமசாமி ஆசிரியர். அவரைப் பற்றிய நினைவுகளே புத்துணர்ச்சிதான்!'' என்று கூறுகிறார் சைலேந்திர பாபு.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு




# 'ரீமிக்ஸ்'

**மரபுப் பெருமைமிக்க நமது திரையிசைப் பாடல்களை 'மாடிஃபிகேஷன்' செய்வது கடைந்தெடுத்த அதிகப்பிரசங்கித் தனமல்லவா?**

அண்மைக்காலமாக பழைய தமிழ்த் திரைப்பாடல்கள் வேறுவிதமான இசை வடிவங்களில் மிகப் பரவலான முறையில் தமிழ் மக்களின் காதுகளைக் கிழித்துக் கொண்டிருக்கின்றன.

பழைய பாடல்களின் இனிமையைக் குலைத்து, நிதானத்தை வேகப்படுத்தி இடையிடையே நகைப்புக்குரிய முறையில் ராக் இசையைத் திணிக்கும் வன்முறைக்கு, நமது தமிழ்த் திரையுலகினர் 'ரீமிக்ஸ்' என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

மேல் நாட்டு ராக் இசைப் பாடலின் நடுவிலே 'நதியில் விளையாடி கொடியில் தலை சீவி' என்று நிதானமான தமிழில் இரண்டு வரிகளை யாராவது சேர்த்து ரீமிக்ஸ் முயற்சி சேர்க்கிறார்களா!

தனது வரலாற்றைத் தானே சிதைத்துக் கொள்கிற தமிழ்த் திரையுலகின் அதிகப்பிரசங்கித்தனத்தைக் கண்டித்து திரையுலகின் தரப்பில் இருந்தே முதல் கண்டனக்குரல் எழுந்திருக்க வேண்டும். அவ்வாறெல்லாம் எதுவும் நிகழவில்லை; அது ஏன் என்றும் தெரியவில்லை.

மனிதகுல வரலாற்றில் நாம் பார்க்கிற, படிக்கிற, கேட்கிற யாவுமே ஆவணங்களாகும். அவ்வகையில் நமது பழைய தமிழ்த் திரைப் பாடல்களும் நமக்கான ஆவணங்களாகவே திகழ்கின்றன. எனவே, அவற்றைக் குழப்பி அதில் மீன் பிடித்துப் பிழைக்கிற அவல நிலைக்கு, இன்றைய நமது இளைய தலைமுறை இசைப் படைப்பாளிகள் போய்விடக் கூடாது. 'சந்தையிலே நின்னாலும் நீ வீரபாண்டித் தேரு' என்கிற ஒரு வரியில் தேனி வீரபாண்டிக் கோயிலின் தேர்த் திருவிழா குறித்து ஆவணப்படுத்தப்பட்டிருக்கிறது. வரலாற்றின் போக்கில் நாளை தேர் மாறினாலும், இந்தத் திரையிசை ஆவணம் மாறாது. இந்தப் பாடலை, 'மார்க்கட்ல நின்னாலும் நீ வீர பாண்டி காரு' என்று ரீமிக்ஸ் செய்து பாடினால், அது நமது ஆவணத்துக்கெதிரான துரோகமேயன்றி வேறென்ன?

''பழைய பாடல்களின் வரிகளுக்கு வேறுவிதமான மியூசிக்கை கம்போசிங் செய்வது ஒன்றும் குற்றமல்ல. இ...



'பொல்லாதவன்' படத்தில் 'எங்கேயும் எப்போதும்'... பாடல் காட்சி

பட்ட 'மாடிஃபிகேஷனை' தற்போது மக்கள் விரும்புகிறார்கள். ஆனால், ஒவ்வொரு படத்திலும் ஒரு ரீமிக்ஸ் பாடலைப் போட வேண்டும் என்பது எங்கள் விருப்பமல்ல. அது தயாரிப்பாளர் மற்றும் இயக்குனரின் விருப்பமாக இருக்கிறது. மற்றபடி இந்தப் போக்கு தவறானது எனும் கருத்திலும் உண்மையில்லாமலில்லை'' என்று ரீமிக்ஸ் குறித்துக் கருத்துத் தெரிவித்திருக்கிறார் இசையமைப்பாளர் விஜய் ஆன்டனி.

''தமது காலத்தில் திரைப்பாடல்களுக்கு இசையமைத்து அதைப் படைப்பாக்கி,



* 'அழகிய தமிழ்மகன்' படத்தில் 'பொன்மகள் வந்தாள்'... பாடல் காட்சி

# வன்முறை!

மக்களின் மாபெரும் வரவேற்புடன் அவற்றை நிலைநிறுத்தியிருக்கும் மூத்த இசையமைப்பாளர்களுக்குச் செய்யும் துரோகமல்லவா இது? எனும் பேராசிரியர் நிர்மலா இராஜேந்திரனின் கேள்விக்கான விடையை இன்னும் எவரும் சொல்லவில்லை.

உலகின் மூத்த இசை தமிழ் இசைதான். இதை நூற்றுக்கணக்கான இசை ஆய்வாளர்கள் உறுதி செய்திருப்பதோடு, திரும்பிய திசையெல்லாம் தமிழ் இசை ஒலிக்க வேண்டும் என்றும் விரும்பி, அதற்கு ஆதரவாக இயக்கத்தையே தொடங்கி நடத்தினார்கள். நமது தொன்மையான அந்த இசையை அடிப்படையாக வைத்தே தமிழ்த் திரைப்படப் பாடல்களுக்கு அக்கால இசையமைப்பாளர்கள் இசையமைக்கத் தொடங்கினார்கள். அத்தகைய மரபுப் பெருமைமிக்க நமது திரையிசைப் பாடல்களை, 'மாடிஃபிகேஷன்' செய்வது கடைந்தெடுத்த அதிகப்பிரசங்கித்தனமல்லவா?

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்ட நீர்த்தேக்கமான கல்லணை தொடர்ந்து பயன்படவேண்டும் என்பதற்காக, அதன் உறுதிக்கு மேலும் உறுதி சேர்க்கும்விதமாக கட்டுமானத்தை பலப்படுத்துவது சீரிய பராமரிப்பு. பழைய பாடல்களுக்கு அத்தகைய 'பராமரிப்பு' அவசியமில்லை. அவை ஒவ்வொன்றும் தேயாத நிலவு.

19ஆம் நூற்றாண்டில் ஸ்காட் என்ற ஐரோப்பியப் பாதிரியார் தமிழின் யாப்பிலக்கணத்தில் வல்லவராகி, திருக்குறளை தம் விருப்பத்துக்குத் திருத்தி எழுதி, பால், இயல், அதிகாரங்களையும் மாற்றி (அதாவது மாடிஃபிகேஷன் செய்துகொண்டு) மதுரைக்குச் சென்று நான்காம் தமிழ்ச் சங்கம் கண்ட வள்ளல் பாண்டித்துரைத் தேவரிடம் காட்டினார். அதிர்ச்சியடைந்த பாண்டித்துரை தேவர் அவரிடமிருந்து அந்தத் (திருத்தப்பட்ட) திருக்குறள் படிகள் மொத்தத்தையும் விலைகொடுத்து வாங்கி, தீ வைத்துக் கொளுத்தி திருக்குறளைக் காப்பாற்றினார். அதுபோல ரீமிக்ஸ் பாடல்களுக்கு ஒரு முடிவு கட்டினால், இப்பிரச்னைக்குத் தீர்வு கிட்டும்.

–ஜெயபாஸ்கரன்

இன்றோடு நான் அந்தப் பையனைப் பார்ப்பது இந்த மாதத்தில் முப்ப தாவது முறை. இருபத்தைந்து வயது இளைஞன். பழுப்பேறிய காகிதங்களை எடுத்துக்கொண்டு டைரக்டர் முத்துராம லிங்கத்தைப் பார்க்க வருவதும், முடி யாமல் செக்யூரிட்டியிடம் சண்டையிட்டுச் செல்வதும் வாடிக்கையான விஷயம். இப்போதெல்லாம் செக்யூரிட்டி அவ னுக்குச் சிநேகிதமாகிவிட்டான். 'ஐயா தூங்கிக் கொண்டிருக்கிறார்' என்றும் 'சாயந்திரம் வந்து பார்' என்றும் சொல்லிக்கொண்டிருந் தான். மோட்டார் போட வேண்டியிருந்ததால் திடீ ரென்று செக்யூரிட்டி பங்களாவுக்குள் செல்ல, அவன் வரு வதற்குள் அந்தப் பையனிடம் பேசி விட எண்ணி அரு கில் சென்றேன்.

''என் பின்னா லயே வா'' என்று விட்டு சாலையில் நடக்கத் தொடங் கினேன். அசோக் நகர் பெண்கள் உயர்நிலைப் பள்ளி வழியாகச் சென்று, அருகிலிருந்த பூங்கா ஒன்றினுள் நுழைந்து பெஞ்சில் அமர்ந்தேன். அவனையும் அமரச் சொன் னேன். எங்களைத் தவிர ஒன் றிரண்டு பேர் ஆங்காங்கே தென்பட்டனர்.

''சொந்த ஊர் எது?''

''திருநெல்வேலி பக்கத்துல அம்பா சமுத்திரம்.''

''என்ன படிச்சிருக்க?''

''சொல்றேன் சார். அதுக்கு முன்னாடி சார் யார்னு...''

''அவசியம் தெரிஞ்சிக்கணுமா? நீ போய் தவம் கிடக்குறியே டைரக்டர் முத்துராமலிங்கம்... அவர் வீட்டுக்கு எதிர்



# உணர்ந்தவன்

## விழிப்புணர்வுக் கதை-9

# பேசுகிறேன்!

மு.மாறன்




வீடு யாருது தெரியுமா?''

''தெரியலயே... யாருது?''

''டைரக்டர் பூபதி பாண்டியனோடது. அவரோட கார் டிரைவர்தான் நான். உன்னை தினமும் பார்ப்பேன். நானும் ஒரு காலத்துல உன்னை மாதிரி ஊரைவிட்டு ஓடி வந்து, வீடு வீடா ஏறி இறங்கினவன் தான். அதான் உங்கிட்ட பேசலாம்னு கூட்டிட்டு வந்தேன்.''

பூபதி பாண்டியன் டிரைவர் என்றதும் அவன் கண்கள் பிரகாசமாக, ஆர்வத்தோடு பேசினான்.

''எம் பேரு கார்மேகம்ங்க. அம்பை ஆர்ட்ஸ் காலேஜ்ல பி.காம். முடிச்சேன். அப்பவே கல்சுரல்ஸ்லாம் நிறைய கலந்துப்பேன். ஃப்ரெண்ட்ஸ், டீச்சர்ஸ் எல்லாரும் சொன்னாங்க, பின்னால நான் பெரிய ஆளா வரப் போறேன்னு. அதான் படிப்பை முடிச்சதும் நேரா சென்னைக்கு வந்துட்டேன்.''

''இவர்தான் நீ பாக்குற மொத டைரக்டரா?''

''இல்லைங்க. இருபதாவது டைரக்டர். தினமும் காலைல எழுந்து குளிச்சுட்டு ஒவ்வொரு டைரக்டர் வீடு, ஆபீஸ்னு வலம் வருவேன். கடந்த ஆறு மாசமா எனக்கு இதுதான் வேலை.''

''சாப்பாடு எல்லாம் எப்படி?''

''இங்க எங்க சித்தி வீட்ல தங்கியிருக்கேன். ஊர்லருந்து கொண்டுவந்த காசுல ஓட்டிட்டிருக்கேன். ராத்திரி ஒரு வேள மட்டும்தான் வீட்ல. மத்த ரெண்டு வேள கையேந்தி பவன்தான்.''

''அப்பா, அம்மா என்ன பண்றாங்க?''

''விவசாயம்தான். நாங்க ஒரு பையன், ஒரு பொண்ணு. தங்கச்சிய மதுரைல கட்டிக் கொடுத்திருக்காங்க.''

''சினிமான்னு கெளம்பி வந்துட்டியே, சினிமாவப் பத்தி உனக்கு என்ன தெரியும்?''

''ஏன், ஊர்ல டெண்ட் கொட்டாய்ல ஆரம்பிச்சு, எக்கச்சக்கமா படம் பாத்திருக்கேன். கல்சுரல்ஸ்லாம் கூட பண்ணியிருக்கேன்.''

''என்ன நடிகராகணுமா?''

''இல்லங்க, அசிஸ்டெண்ட் டைரக்டர். கதையெல்லாம் நிறைய எழுதியிருக்கேன், பார்க்கறீங்களா?'' என்று பழுப்பேறிய காகிதங்களை நீட்டினான். 1980ல் வந்த படங்களின் சாயலுடன் சில ஒன் லைன்கள் இருந்தன. ஒரு கதையை திரைக்கதை என்கிற பெயரில் சொதப்பியிருந்தான்.

''என்ன சார், நல்லாருக்கா? தயாரிப்பாளர்ல ஆஸ்கார் ரவிச்சந்திரன் எப்படி மீடியாவுக்குத் தம்மை இதுவரை அடை

யாளப்படுத்திக்கலயோ, அது மாதிரி டைரக்டர்ல முத்துராமலிங்கம் சாரும் தம்மை காண்பிச்சுக்கல. ஆனா அவரோட படங்கள் பார்த்து பல நாள் தூங்காமத் தவிச்சிருக்கேன். அவரை நேர்ல பார்த்து வாய்ப்புக் கேக்கலாம்னா செக்யூரிட்டி விடவே மாட்டேங்கறார். பூபதி சார்கிட்டயாவது எப்படியாச்சும் என்னைச் சேர்த்து விட முடியுங்களா?''

''நான் ஒண்ணு சொன்னா கேப்பியா? இது 2007. சினிமால சேரணும்னு மஞ்சப் பையத் தூக்கிட்டு வந்துட்டா போதாது. அதுக்கான தகுதிகள் வேணும்.''

அவன் சற்றே கோபப்பட்டான்.

''ஏன், எனக்குத் தகுதி இல்லையா?''

''பத்தாது. 1980க்கு வேணும்னா இந்தத் தகுதி போதும்னு சொல்லலாம். இந்தக் காலத்துக்கெல்லாம் இது பத்தாது. நீ ரொம்பவே பின்தங்கியிருக்க.''

இப்போது அவனிடம் அதிர்ச்சி.

''நான் என்ன பண்ணணும்?''

''வளர்த்துக்கணும்; சினிமாவோட அடிப்படையத் தெரிஞ்சுக்கணும். நிறைய படிக்கணும். சுந்தரராமசாமி தெரியுமா உனக்கு?''

''ம்ஹூம்... யாரு அவரு மலையாள டைரக்டரா?''

''இந்த அளவுல இருக்கு உன் ஞானம்! அவர் சாகித்ய அகாடமி விருது வாங்கின எழுத்தாளர். நீ இன்னும் போக வேண்டிய தூரம் எவ்வளவோ இருக்கு. மொதல்ல பார்ட் டைமா ஒரு வேலையைத் தேடிக்கோ. கிடைக்குற சம்பளத்துல வீட்டுக்குக் கொஞ்சம் அனுப்பிட்டு மிஞ்சின காசுல சினிமாவக் கத்துக்கோ. தமிழ் சினிமா மட்டும் உன்னைத் தகுதியாக்காது. பிடிக்குதோ, இல்லையோ எல்லா மொழிப் படமும் பாரு. உலக சினிமாக்கள் தர்ற அறிவை சுவாசி.''

நான் பேசப் பேச அவன் கலவரமாய் என்னைப் பார்த்தான்.

''நான் உன்னைக் குறைச்சுப் பேசறேன்னு தப்பா நினைக்காதே. நீ நல்லா வரணும்ங்கற ஆசையில்தான் சொல்றேன். இப்படிக் கேனத்தனமா டைரக்டருங்க வீட்ல பழியா கிடக்கறதை முதல்ல நிறுத்து...'' நான் பேசிக்கொண்டிருக்கும்போதே அவன் பாதியில் எழுந்துவிட்டான்.

''என்ன கிளம்பிட்ட?''

அவன் பதிலே சொல்லவில்லை. புறப்பட்டுவிட்டான்.

இது நடந்து எட்டு மாதங்கள் கடந்திருக்கும். யதேச்சையாக ஒரு ஹோட்டலுக்குச் செல்ல, ஆர்டர் எடுக்கும் ஸ்டுவர்ட்டாக கார்மேகம்! என்னை அடையாளம் கண்டு பேச ஆரம்பித்துவிட்டான்.

''என்ன சார் நல்லாருக்கீங்களா? இங்கே எப்படி?''

''பூபதி சார் வந்தாங்க. என்னையும் வரச் சொன்னார். மாடிக்குப் போயிருப்பார் போல. விடு, நாம பேசிட்டிருப்போம். எப்படியிருக்க?''

''நல்லாருக்கேன் சார். அன்னைக்கு நீங்க சொன்னது என்னை



ரொம்பவே பாதிச்சுருச்சு. உங்க மேல ஒரு வாரத்துக்குக் கோபம் இருந்துச்சு. எங்கயும் போகாம வீட்லயே அடைஞ்சு கிடந்தேன். அப்புறம் யோசிச்சுப் பார்த்தேன். யாரோ ஒருத்தரான நீங்க ஏன் என்னை இப்படிப் பேசணும்னு ஆழ்ந்து பார்த்தப்ப, நம்ம கிட்டதான் தப்பு இருக்குன்னு தோணுச்சு. அது மட்டுமில்லாம பல இயக்குநர் களோட பேட்டிகளை டி.வி.லயும், பத் திரிகைகள்லயும் பார்த்தேன். நீங்க அன் னைக்கு சொன்ன விஷயங்களைத்தான் அவங் களும் அப்படியே பிரதிபலிச்சிருந்தாங்க. அப்புறம் என்ன, என்னைத் தகுதிப்படுத் திக்கிற வேலைல இறங்கிட்டேன்.''

''என்ன பண்ணின?''

''நிறைய படிச்சேன். பல மொழி இலக் கியங்கள சாப்பாடு, தண்ணி இல்லாம கரைச்சுக் குடிச்சுட்டிருக்கேன். நிறைய படங்கள் பார்க்கறேன். உலக சினிமாக் களோட டி.வி.டி. லைப்ரரி ஒண்ணு ரெடி பண்ணியிருக்கேன். எழுத்தாளர் சுந்தர ராமசாமி மேல இம்ப்ரஸாகி அவரைச் சந் திக்கப் போனேன். அப்புறம்தான் தெரிஞ் சது அவர் காலமாயிட்டாருன்னு. அவரைப் பத்தின குறும்படம் ஒண்ணு எடுக்கப் பணம் சேர்த்துட்டிருக்கேன். என்னோட ரெண்டு மூணு ஸ்க்ரிப்டுங்க, ஆவணப் படம் எடுக்க ஒரு பிரபல தொலைக்காட்சி யில செலக்ட் ஆகியிருக்கு.''

''ரொம்ப சந்தோஷமா இருக்குப்பா, நீ சொல்லும்போது.''

''கொஞ்சம் வாங்க சார்'' என்று கார் மேகம் என்னை ரெஸ்ட் ரூமுக்கு அழைத் துச் சென்றான். அங்கே இரண்டு பேர் தூங்கிக்கொண்டிருக்க, முதலாமவனைக் காட்டிப் பேசினான்.

''இவன் பேரு பாஸ்கர் சார். இவனும் என்னை மாதிரி சினிமால பெரிய ஆளா வரணும்னு ஊர்லருந்து ஓடி வந்தவன். வடபழனில ஒரு பெட்ரோல் பங்குல பாரதிராஜா வேலை செஞ்சாருன்னு அங்க போய் வேலை தேடிட்டிருந்தான். ஒரு நாள் அறிமுகமானான். நல்லா திட்டி அட்வைஸ் பண்ணேன். இப்ப இவனும் தகுதியாயிட்

## பாரதிராஜா மாதிரி பெட்ரோல் பங்க்ல வேலை செஞ்சா டைரக்டராயிட முடியுமா?



டிருக்கான். இவன் மாதிரிதான் இந்த சங் கரும். டைரக்டர் சசி குமுதம் பத்திரிகை யில செக்யூரிட்டியா வேலை செஞ் சாருன்னு அங்க போய் வேல பார்த்துட்டு வாய்ப்பு தேடிட்டிருந்தான். இப்பத்தான் தன்னை உணர்ந்திருக்கான்.''

நான் கார்மேகத்தையே ஊடுருவிப் பார்த்தேன்.

''நீ இப்ப தகுதியாயிட்ட கார்மேகம். நான் உன்னை டைரக்டர்கிட்ட சேர்த்து விடுறேன்.''

''இல்ல சார். நான் இன்னும் தகுதி யானதா நினைக்கல. இன்னும் போக வேண்டிய தூரம் எவ்வளவோ இருக்கு. இப்பத்தான் முதலடி எடுத்து வெச்சிருக் கேன். அவசரப்பட்டு செஞ்சு அஸ்தமன மாகறதைவிட, பொறுமையா, நிதானமா, பக்குவப்பட்ட நிலைதான் நாளைய பர வசத்துக்கு உத்தரவாதம் தரும்.''

''ரொம்ப நல்லா பேசற கார்மேகம். அப்பா, அம்மா எப்படியிருக்காங்க?''

''இங்கேயே கூட்டிட்டு வந்துட்டேன் சார். சினிமால நான் சாதிக்க அவங்களும் இப்ப எனக்குத் துணையா இருக்காங்க.''

''சரி, உனக்கு எப்ப உதவி இயக்குநரா சேரத் தகுதியிருக்குன்னு நினைக்கிறியோ, அப்ப என்னை வந்து பாரு'' என்றுவிட்டு வெளியே வந்தேன். காரில் ஏறுகையில், யாரோ பின்னாலிருந்து பேசுவது கேட்டது...

''யேய் அதோ போறாரே... அவரு டைரக்டர் முத்துராமலிங்கம் மாதிரி தெரியல..'' ●

அஜீத்தின் மாஸ்டர் ப்ளாஸ்டர் படம். பழைய பில்லாவை சொட்டை தட்டி, தேவையான இடங்களில் செதுக்கி, சில கேரக்டர்களை நீக்கி, சிலவற்றைச் சேர்த்து, ஹாலிவுட் தரத்தில் தந்திருக்கிறார்கள். படு ஸ்டைலிஷாக புத்தம் புது அஜீத். பில்லா, வேலு என்று பின்னி மேய்ந்திருக்கிறார். ஆக்ஷனில் பில்லா அலப்பறை செய்ய, வேலு காமெடி சரவெடி. டி.எஸ்.பி. பிரபுவிடமே 'என்ன கொடுமை சார்' என்பது கலக்கல் காக்டெய்ல். ஆனால், படம் முழுக்க நேரம் கிடைக்கும்போதெல்லாம் அஜீத் நடந்துகொண்டே இருப்பது சலிப்பைத் தருகிறது.

நயன்தாரா க்ளாமர் சிம்கார்டு. துப்பாக்கி, தூக்கின ஹைஹீல்ஸ் என்று விஜயசாந்தியை மிஞ்சி விடுகிறார். ஸ்பைடர்மேன் மாதிரி அந்தரத்தில் தொங்கியபடி அவர் நடத்தும் கன் விமன் ஷோ மிரட்டல் அத்தியாயம். நமீதா நாட்டு வெடிகுண்டு. நயன் முன்னால் புஸ்ஸாகிவிடுகிறார்.

பில்லாவைப் பிடிக்கவும், மாற்றவும் பிரபு நடத்தும் தகிடுதத்தங்கள் சுவாரஸ்யம் நிறைந்தவை. நயமாக நடித்திருப்பவர், குண்டடிபட்டு உயிர் விடும்போது உச்சுக் கொட்ட வைத்துவிடுகிறார். ரகுமான் கொடுத்த வேலையைக் கச்சிதமாய்ச் செய்திருக்கிறார்.

'மை நேம் ஈஸ் பில்லா'வில் மட்டும் யுவன் எடுபடுகிறார். பின்னணி இரைச்சலும் மிரட்டலும் கலந்த கலவை. பல இடங்களில் உரையாடல்கள் காதிலேயே விழவில்லை. நீரவ்ஷாவின் ஒளிப்பதிவு செம ஸ்மார்ட். 'பில்லா'வை உயர்தரத்துக்கு அழைத்துச் சென்றிருப்பதில் இவரின் பங்கு மிக அதிகம். மலேஷியா ச்சும்மா தகதகக்கிறது. திரைக்கதை இயக்கம் விஷ்ணுவர்தன்.







ஜெகதீஷ் யாரென்ற சஸ்பென்ஸ் உடைந்ததும் படம் திக்குத் தெரியாமல் தடுமாறுகிறது. வேலுவின் டச் அங்கங்கே இருந்தாலும் காமெடி போர்ஷன் படுவீக். என்றாலும், அயல்நாட்டுப் படங்களுக்கு இணையாக பில்லாவை வடிவமைத்திருப்பதற்காக வலிக்கும் வரை கைகுலுக்கலாம் விஷ்ணுவர்தனை.

- ரேவதி

உ

# கச்சி மூதூர் அர்ச்சகர்கள் க்ஷேமநல ட்ரஸ்ட்


நிர்வாக அலுவலகம்: 16, இரண்டாவது மெயின் ரோடு, கோட்டூர்புரம், சென்னை-600 085.
போன்: **24471936 / 2447 2540**
**E.Mail : prb@vsnl.com Website : http://personal.vsnl.com/kmaw_trust**




## வேண்டுகோள்

- ஸ்ரீ காஞ்சி மாமுனிவரின் ஆக்ஞைப்படி அவர் அருளுடன் இந்த டிரஸ்ட் 1986ல் ஸ்தாபிக்கப்பட்டது.
- தமிழ் நாட்டில் உள்ள பழைமையான கிராமக் கோவில்களில் பூஜை செய்யும் மிக ஏழ்மை நிலையில் உள்ள பூசாரிகள் உள்ளிட்ட அர்ச்சகர்களுக்கு ஒவ்வொரு மாதமும் உதவிப்பணம் அளிக்கப்படுகிறது.
- ஸ்ரீ மஹா பெரியவாளின் மேலான அருளுரைப்படி இந்த நற்பணிக்கு நன்கொடை அளிக்குமாறு ஆஸ்திக அன்பர்களை வேண்டிக் கொள்கிறோம். ரூ.4,000/-க்கு மேல் மாத மொத்த வருமானம் பெறு பவர்கள் தங்களது ஒருமாத மொத்த வருமானத்தை *தங்கள் . வாழ்நாளில் அவர்களுடைய சௌகர் யப்படி*, மொத்தமாகவோ அல்லது பல தவணைகளிலோ நன்கொடையாக கொடுத்து உதவுதல் நலம் என ஸ்ரீ மஹா சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்கள். அவரவர்கள் தங்களால் இயன்றளவு அளிக்கும் நன்கொடையை நன்றியுடன் பெற்றுக் கொள்வோம்.
- நன்கொடைகளை க்ராஸ் செய்த காசோலை அல்லது டிமாண்ட் டிராப்டாக ***"KACHCHI MOODOOR ARCHAKAS WELFARE TRUST"*** என்ற பெயரில் சென்னையில் ஏதாவதொரு வங்கிக் கிளையில் பெறுமாறு நிர்வாக அலுவலகத்திற்கு அனுப்பவும்.
- தற்சமயம் இந்த டிரஸ்ட் கிராமங்களிலுள்ள 314 ஏழை அர்ச்சகர்களுக்கு மாத உதவித் தொகையாக ரூ. 650/-ஐ வழங்கி வருகிறது.
- ஒவ்வொரு ஆண்டும் மாத உதவி கோரும் ஏழை அர்ச்சகர்களின் எண்ணிக்கை அதிகரிப்பதாலும், முதலீடுகளின் பேரில் வரும் வட்டி விகிதம் வேகமாக குறைந்து வருவதாலும், டிரஸ்டின் மூலதனத்தை உடனடியாக அதிகரிக்க வேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டுள்ளது. ஆகையால், ஸ்ரீ காஞ்சி மகானின் அருளாக்ஞையின்படி தங்களுடைய நன்கொடைகளை விரைவில் அனுப்பி உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**C.V. Narasimhan, I.P.S., (Retd)**
பொறுப்புக் குழுவின் தலைவர்.

# வையத் தலைமை கொள் - 9

பாரதி ஞாபகார்த்த
பிரயத்தனங்களுக்கு என்
ஆசிர்வாதம்
மோ. க. காந்தி

✱ அமரர் கல்கிக்கு, காந்திஜி எழுதிய கடிதம்...

பல மொழிகளைக் கற்றுத்தேர்ந்திருந்த காந்திஜி, தமக்கு வரும் கடிதங்கள் எந்த மொழியில் வந்ததோ அதே மொழியில் பதிலளிக்க முயற்சி செய்வார். தமிழும் ஓரளவு எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டிருந்தார். அமரர் கல்கி, எட்டையபுரத்தில் பாரதியாருக்கு மணிமண்டபம் கட்டும் முயற்சியில் ஈடுபட்டிருந்தபோது, காந்திஜி 'பாரதி ஞாபகார்த்தப் பிரயத்தனங்களுக்கு என் ஆசிர்வாதம்' என்று தமிழிலேயே வாழ்த்துச் செய்தி அனுப்பியிருக்கிறார். தம் வாழ்நாள் முழுவதும் தமக்கு வந்த கடிதங்கள் அனைத்துக்கும் பதில் எழுதியுள்ளார். வலது கையில் எழுதி எழுதி, கைவலிக்க ஆரம்பித்ததால், இடது கையால் எழுதித் தள்ளும் திறமையும் பெற்றிருந்தார்.



அமரர் கல்கி போன்ற பெரிய மனிதர்களின் கடிதங்களுக்கு மட்டுமல்ல, ஒரு சாதாரண இந்தியக் குடிமகனின் மலச்சிக்கலுக்கும் தீர்வு சொல்லிக் கடிதம் எழுதியிருக்கிறார். அதோடு விடாமல் பிரச்னை சரியாகிவிட்டதா என்று பதில் எழுதவும் என்றும் அக்கறை காட்டியிருக்கிறார். இன்னும் ஒரு படி மேலேபோய் தாம் நடத்தி வந்த 'யங் இந்தியா' பத்திரிகையிலும் இது குறித்து எழுதினார். அதனால்தான் காந்திஜி மகாத்மா. அவருக்குத் தலைவர்களும் ஒன்று; சாதாரண சாமான்யனும் ஒன்றே.

ஐந்து மொழிகளில் புலமை. தனக்குத் தொழில் கவிதை என்று நிர்ணயித்துக்கொண்டு பலவிதமான கவிதைகளை எழுதியது; தமிழின் பண்டைய இலக்கியங்களையெல்லாம் கரைத்துக் குடித்தது; வேத உபநிஷதங்களைப் படித்து,

# காலம் என்னும் பொக்கிஷம்!

'சேவாலயா' முரளிதரன்

வசன கவிதைகளாய்ப் பல வேத வாக்கியங்களை மொழிபெயர்த்தது; பகவத் கீதைக்குத் தமிழ் மொழிபெயர்ப்பு; எழுத்தாளர்; பத்திரிகையாளர்; தாமே கார்ட்டூன் படங்கள் வரையும் திறமை; சுதந்திரப் போராட்டத்தில் தீவிர ஈடுபாடு; இதையெல்லாம் செய்து முடித்து, பாரதி கண்ணை மூடியபோது அவருக்கு வயது முப்பத்தொன்பதுதான்! 'கனக்கும் செல்வம்; நூறு வயது' கேட்டார். கிடைக்கவில்லை.

**வே**தங்களையும், உபநிஷதங்களையும் மிக ஆழமாகப் படித்துப் புதுப்புது அர்த்தங்களைத் தந்தது; இந்தியா முழுவதும் கால்நடையாகவே வலம் வந்தது; இரண்டு முறை வெளிநாட்டுப் பயணம் சென்று, பல இடங்களில் அனல் பறக்கும் சொற்பொழிவுகள் ஆற்றியது; வழிவழியாகத் துறவிகளைச் சேர்த்து நாட்டுக்குச் சேவை செய்ய நிறுவனம் நிறுவியது; உலகம் முழுவதும் சீடர்களைத் தட்டி எழுப்பியது; இவற்றையெல்லாம் செய்து முடித்து விவேகானந்தர் முக்தியடைந்தபோது அவருக்கும் முப்பத்தொன்பது வயதுதான்.

இத்தனை 'பிஸி'யாக வாழ்ந்த இந்த மூவரும் தங்களின் ஒரு வாழ்நாளிலேயே இவ்வளவு சாதிக்க முடிந்ததே, நம்மால் ஏன் முடியவில்லை? பாரதி சொன்ன 'காலம் அழியேல்'தான் இன்று 'Time Management' என்ற பெயரில் பல இடங்களிலும் பேசப்படுகிறது.

நாம் எங்கே போகிறோம் என்பதில் தெளிவு இல்லையென்றால், எந்தப் பாதையும் ஒன்றுதான். அதேபோல், இப்போது எங்கே இருக்கிறோம் என்பதில் தெளிவு இல்லையென்றால் எந்த வரைபடமும் நமக்குப் பயனளிக்காது. எனவே, முதல் தேவை நாம் எங்கே போகிறோம்; இன்று எங்கே இருக்கிறோம் என்பன நமக்குத் தெளிவாகப் புரிய வேண்டும். 'குறிக்கோள் இருப்பவன் ஆயிரம் தவறு செய்தால், குறிக்கோள் இல்லாதவன் பத்தாயிரம் தவறுகள் செய்வான்' என்கிறார் சுவாமி விவேகானந்தர்.

**யோசனை எதுவும் செய்யாமல், நாம் பலமுறை ஒரு வேகத்தில் காரியத்தில் இறங்கிவிடுவதும், பிறகு பின்வாங்குவதும்கூட 'காலம் அழித்தல்' தான்.**

எனவே, குறிக்கோளை முதலில் சரியாக நாம் முடிவுசெய்து கொள்வோம். இந்தக் குறிக்கோள் யோசிக்க மிகப் பெரியதாக இருக்கலாம். நம்மால் முடியுமா என்ற அச்சத்தை நம்முள் ஏற்படுத்துவதாக இருக்கலாம். எனவே, இந்தத் தொலைநோக்குக் குறிக்கோளை நாம் ஆண்டுக் குறிக்கோளாக, பின் மாதக் குறிக்கோளாக, பின் நாள் குறிக்கோளாகப் பகுத்துக்கொள்ள வேண்டும். நாம் செய்யும் ஒவ்வொரு வேலையும் நம்மை இந்தக் குறிக்கோளுக்கு அருகில் அழைத்துச் செல்லுமெனில், நாம் நமது நேரத்தைப் பயனுள்ள



தாகச் செலவு செய்வதாக அர்த்தம்.

குறிக்கோளை அடைவதற்கான முயற்சியாக இன்று என்ன செய்ய வேண்டும் என்பதை, காலையிலேயே நாட்குறிப்பில் குறித்துக்கொள்ளும் பழக்கத்தைக் கைகொள்ளலாம். பலமுறை இன்று நமக்கு நிறைய வேலை இருக்கிறது என்று கண் விழிக்கிறபோதே ஒரு வித 'டென்ஷன்' ஏற்படுகிறது. அதைப் போக்கச் சுலபமான வழி, நாட்குறிப்பை எடுத்துக்கொண்டு, என்னென்ன வேலைகள் இன்று செய்ய வேண்டும் என்று பட்டியல் இடுவதே ஆகும். பட்டியல் எழுதி முடித்ததும் பார்த்தால், பல சமயங்களில், 'இவ்வளவுதானா? இதற்காகவா நம் மனது அத்தனை ஆர்ப்பாட்டம் செய்தது?' என்று எண்ணத் தோன்றும்.

பட்டியல் எழுதி முடித்த பின், இந்த நீண்ட பட்டியலில் எதை முன்னால் செய்ய வேண்டும், எதைப் பின்னால் செய்ய வேண்டும் என்று குறித்துக்கொள்வது நல்லது. சில வேலைகள் மிக முக்கியமானவையாக இருக்கும். அன்றே செய்தாக வேண்டிய காரியமாக இருக்கும். சில காரியங்கள் ஒத்திப் போட்டாலும் தவறில்லை என்ற வகை. எனவே, பட்டியலில் உள்ள வேலைகளை வகைப்படுத்தி, பிறகு வரிசைப் படுத்திக் கொள்ளவும். மிக முக்கியமானது, யோசிப்பதற்குச் சற்று நேரம் ஒதுக்கிக் கொள்வது. யோசனை எதுவும் செய்யாமல், நாம் பலமுறை ஒரு வேகத்தில் காரியத்தில் இறங்கிவிடுவதும், பிறகு பின்வாங்குவதும்கூட 'காலம் அழித்தல்'தான்.

பல சமயங்களில் பாதி வேலையை நாம் செய்துவிட்டு, மீதி வேலை மற்றவர்கள் செய்யவேண்டிய நிலைமை இருக்கலாம். அடுத்தவர் செய்து முடித்த பின், மீண்டும் நாம் தொடர வேண்டி இருக்கலாம். இடைப்பட்ட காலம் நாம் சும்மா காத்திருக்கும் காலம். இதைப் போல பல 'காத்திருப்புக் காலங்கள்' வரும். ஒருவரைப் பார்க்கப் போகிறோம். அங்கு அவருக்காகக் காத்திருப்பு; பேருந்து நிலையம், ரயில் நிலையம் என பல இடங்களில் காத்திருப்பு; இந்த நேரத்தைப் பயன்படுத்திக்கொள்ள நல்ல புத்தகம் கையில் இருந்தால், அல்லது இந்த நேரங்களை நம் யோசனை நேரமாக மாற்ற முடிந்தால், காலம் சரியானபடி பயன்படும். ஒரு செயலை முழுவதுமாக முடித்த பின்புதான், அடுத்த செயலைச் செய்ய முடியும் என்று மனத்தைப் பழக்கிக்கொண்டால், பல 'காத்திருப்புக் காலங்கள்' நமக்கு வீணான நேரங்கள் ஆகிவிடும்.

காலையில் வேலைப் பட்டியல் இடுவதுபோல, இரவு என்னென்ன வேலைகள் சரியாக முடிந்தன என்று review செய்யவும் நேரம் ஒதுக்க வேண்டும். நாளை இன்னும் சிறப்பாகச் செயல்பட, இன்று செய்த தவறுகளை எப்படி மாற்றிக்கொள்ள முடியும் என்று யோசிக்கவேண்டும். காலம் என்பது நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள நீட்டிக்க முடியாத பொக்கிஷம். இதைச் சரியாகப் பயன்படுத்துபவர்கள் தலைவர்கள் ஆகிறார்கள். சரியான Time management கற்றுக்கொண்டுவிட்டால், எப்பொழுதும் சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருக்கவும், அதேசமயம் மனத்தை மிக relaxed ஆக வைத்துக்கொள்ளவும் முடியும். இன்னும் பல வேலைகளை எடுத்துத் திறம்படச் செய்ய முடியும்.

(சுவாசிப்போம்)

# DO YOUR HOME WORK BEFORE INVEST




**Call for free visit:**
**28345104/05/06**

## Consider the Ground Realities

• 100' road is being developed between Vandalur-IT corridor • World-Class Health City & Chettinad Medical College nearby • Comfortable connectivity to IT corridor, GST Road & Industrial corridor • Close to city • Fast appreciation of land value.

### Sreemath Ramanujur Town

DTCP Appd. Housing Plots,
Vandalur - OMR

### Sree Padmanabha Avenue

DTCP Appd. Housing Plots,
Near Kanchi Town & NH4

• 10 min. drive from proposed airport at Sunguvarchatram • Two way access from NH4 & Kanchi Bus stand. Houses nearyby. Best appreciation predicted in a year or two.

**CLEAR TITLE : RELIABLE PROMOTER**

**BLB ESTATES**
**PRIVATE LIMITED**

No. 21, Chinnaiah Street, T.Nagar, Chennai - 600 017.
E-mail : blbestmail@vsnl.net Web : www.blbestates.com

**INVESTING IN VALUES**

# JAI TOURS

எண்.5, முதல் மெயின் ரோடு, அரும்பாக்கம், சென்னை-106.
Ph: 044 - 24756202, 93805 37352, 9884565614

**ஒரு நாள் சுற்றுலா**

| | | | |
|---|---|---|---|
| Jan - 1 | Rs. 300/- | ரத்தனமங்களம், ஸ்கந்தாஸ்ரம், மத்திய கைலாஸ், ஸ்ரீ பத்மநாபன். | 1.00 pm<br>8.00 pm |
| Jan - 9, 17,27 | Rs. 400/- | தன்வந்தரி, ரத்தனகிரி, செம்பாக்கம், விரிஞ்சிபுரம், ஜலகண்டேஸ்வர் & கோல்டன் டெம்பிள் (தங்கக் கோயில்) ( Incl - transport, Lunch only ) | 5.30 am<br>8.00 pm |
| Jan - 8 | Rs. 380/- | அனுமன் ஜெயந்தி சிறப்பு: பஞ்சமுகம் திருவல்லூர், கக்கலூர், நல்லாத்தூர், பேஸ்ஸமன் ஆஞ்சநேயர். | 5.30 am<br>8.00 pm |
| Jan - 5 | Rs. 375/- | பிரதோஷம் : காஞ்சிபுரம் சிவஸ்தலங்கள் (பகல் உணவு) | 5.30 am |
| Jan - 20 | Rs. 375/- | பிரதோஷம் : வந்தவாசி வட்டம் (பகல் உணவு) | 8.00 pm |
| வியாழன் அல்லது சனிக்கிழமைகளில் திருப்பதி திருமலா தரிசனம் Rs. 900/- திருச்சானூர், சீனிவாச மங்காபுரம், இஸ்கான் & திருமலை, (Incl-Lunch, Dharshan & +2Laddu) | | | 5.30 am<br>9.00 pm |
| Jan - 31<br>Feb - 3 | Rs.1500/- | மந்த்ராலயம், நவபிருந்தாவனம், பிசாளை, ஆனைகுந்தி & கனூர். ( Incl - acc, transport, trainfare) | |
| Feb - 7,8,9 Rs.1000/- திருநங்கூர் 11 கருடசேவை ( stay & transport ) | | | |
| Feb - 4 | Rs 300/- | பிரதோஷம் : பஞ்செட்டி, திருசூலநாதர், மாதாவரம், மணலி | 1 to 8 pm |

# தமயந்திக்கு அருளிய காத்யாயனி

சுதா சேஷய்யன்

தமயந்தி நளனை மனத்தளவில் வரித்தாள். அவள் நளனைப் பார்த்ததில்லை. ஆனால், அவனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாள் - நைடத நாட்டு மன்னன் என்பதும் தெரியும். அவனைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று முடிவு கட்டினாள். அவளுடைய தந்தைக்கும் அந்தச் செய்தி தெரிந்தது. இருந்தாலும், அந்தக் காலத்து முறை என்னவென்றால் ஒரு சுயம்வரம் நடத்தி, அந்தப் பெண் யாரை விரும்புகிறாளோ, அவரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளக்கூடிய உரிமை அந்தப் பெண்ணுக்கு உண்டு. சுயம்வரத்துக்கு எல்லா ஏற்பாடும் ஆகிவிட்டது. எல்லோரும் வந்து இறங்கியாகிவிட்டது. நளனும் வந்துவிட்டான். உலகத்துக்கே தெரியும் நளன்தான் மறுநாள் சுயம்வரத்தில் அவளுக்கு மாலையிடப் போகிறான் என்று! இருந்த போதிலும், தேவலோகத்தில் இருந்த சில பேருக்கு, தமயந்தியுடைய அழகைக் கேள்விப்பட்டவுடனே, அவள் தனக்கு மாலையிட மாட்டாளா என்று ஆசை வந்தது.

சனீஸ்வரன் உட்பட நான்கு தேவர்கள் சுயம்வரத்துக்காக நைடத நாட்டுக்கு வந்து இறங்கினார்கள்! சுயம்வரத்துக்கான ஏற்பாடெல்லாம் நடந்து கொண்டிருந்தது. சுயம்வரத்துக்கு அரசர்கள் வருவார்கள்; இளவரசர்கள் வருவார்கள். எல்லோரையும் வரவேற்ற தமயந்தியினுடைய தந்தை, அவரவர்களுக்குத் தங்குவதற்கான இடமெல்லாம் கொடுத்து, ''ஆஹா! சனீஸ்வரரே வந்திருக்கிறாரா? அப்படியானால் என் பெண்ணின் அழகு எப்பேர்ப்பட்ட அழகு'' என்று எல்லோரிடமும் சொல்லிக்கொண்டிருக்கிறார்.

இருந்தாலும், எழுதப்படாத விதி போல் எல்லோருக்கும் தெரிந்த விஷயம் - நளனுக்குத்தான் அவள் மாலையிடுவாள் என்பது. தேவர்களுக்கும் அது தெரிந்திருந்ததால், வந்து இறங்கிய நான்கு பேரும் சேர்ந்து யோசித்தார்கள் - 'தமயந்தியின் மனத்தை மாற்ற வேண்டுமே... எப்படி மாற்றுவது? நம் நால்வருள் யாரேனும் ஒருவரை அவள் மாலையிடும்படி செய்ய வேண்டும். என்ன செய்வது...' யோசித்தார்கள்.

ஒரே ஒருத்தரால்தான் தமயந்தியின் மனத்தை மாற்ற முடியும். அவரிடம் போய் சிபாரிசு கேட்கலாம்... நளன் சொன்னால் மட்டுமே தமயந்தி மனம்மாறுவாள்! நான்கு பேரும் நேராக நளன் தங்கியிருந்த இடத்துக்குப் போனார்கள். ''உன்னால் ஒரு காரியம் ஆகவேண்டும்'' என்றார்கள்.

### நளன் கொடுத்த வாக்கு

''ஓ! தாராளமாக! பண்ணிவிட்டால் போச்சு!'' என்று நளன் உடனடியாகப் பதில் சொன்னான். 'என்ன, ஏது?' என்றெல்லாம் அவன் கேட்கவே இல்லை. அந்தக் காலத்து வழக்கம் அப்படி. யாரேனும் ஏதாவது வேண்டும் என்று கேட்டால்,

வந்தவர்களுக்கு 'இல்லை' என்று சொல்லாமல் 'சரி, செய்துகொடுக்கிறேன்' என்று சொல்வதுதான் வழக்கம். அதுவும் ஒரு நாட்டுக்கு அரசனாக இருக்கக்கூடியவன், 'மாட்டேன்' என்று சொல்லக்கூடாது.

நளனிடம் வந்து கேட்டவர்கள், தங்கள் அடையாளத்தை மட்டும் வெளிப்படுத்தவில்லை. 'நான் சனீஸ்வரன், நான்தான் அக்னிதேவன்' எதுவும் சொல்லாமல் கேட்டபோதும் வாக்கு கொடுத்துவிட்டான்.

வாக்கு கொடுத்த பிறகு, அவர்கள் சொன்னார்கள் : ''ஒன்றுமில்லை.. தமயந்தியிடம் போய்ச் சொல்லு. எப்படியாவது உன்னை விட்டுவிட்டு, எங்களில் யாராக இருந்தாலும் பரவாயில்லை. யாரேனும் ஒருவரைத் தேர்ந்தெடுக்கச் சொல்லு. நாளை காலை சுயம்வரம் நிகழும்போது, எங்களில் ஒருவருக்கு மாலையிடச் சொல்லு...''

கொடுத்த வாக்கை மீற முடியாது! தர்மசங்கடத்தில் சிக்கிக்கொண்ட நளன், ''சரி, நீங்கள் கேட்டதை நான் போய்ச் செய்கிறேன். ஆனால், செய்ய முடியாத ஒரு நடைமுறைப் பிரச்னை - என்ன பிரச்னை தெரியுமா? என்னதான், அந்தப் பெண் ஒருவனை மனத்துக்குள் வரித்திருக்கிறாள் என்றாலும், அவளிருக்கக்கூடிய அந்தப்புரத்துக்கு கல்யாணத்தன்று காலை வரை அந்த ஆடவன் நுழைய முடியாது. நான் எப்படிப் போவேன்?'' என்றான் நளன்.

உடனே இவர்கள் பார்த்தார்கள். ''எங்களுக்காக - எங்கள் காரியம் ஆக வேண்டும் என்பதற்காக ஒரு வரம் கொடுக்கிறோம்'' என்றார்கள், நளனை நோக்கி. என்ன வரம்...? ''தமயந்தி கண்களுக்கு மட்டும் நீ தெரிவாய். வேறு யார் கண்ணிலும் படாமல் நீ அந்தப்புரத்துக்குள் போகலாம்.''

### தமயந்தியின் மறுப்பு!

**வ**ரம் பெற்ற நளன், அந்தப்புரத்துக்குள் போகிறான். தமயந்தியிடம் போய், 'இவர்கள் இந்த மாதிரி சொன்னார்கள்' என்று சொல்லுகிறான். அதைக் கேட்டு



முடித்துவிட்டு தமயந்தி என்ன சொல்கிறாள்...? ''அவர்களுக்கு வாக்கு கொடுத்தது உன்னுடைய காரியம். அந்த வாக்கைக் காப்பாற்றுவதற்காக இங்கு வந்து சொன்னீர்கள் - அது உங்களுடைய கடமை; அதுவும் சரி. ஆனால், என் மனம் அதைக் கேட்கவேண்டும் என்று அவசியம் இல்லை. எனக்கென்று ஒரு கடமை இருக்கிறது; எனக்கென்று ஒரு சத்தியம் இருக்கிறது. என் மனத்துக்குள் உங்களைத்தான் என்று வரித்தாயிற்று; நான் அதை மீறத் தயாராயில்லை. தயவுசெய்து புறப்பட்டுப் போய்விடுங்கள்'' என்றாள்.

நளன் எவ்வளவு தூரத்துக்குச் சத்தியசந்தன் பாருங்கள்... தமயந்தியின் அந்தப்புரத்திலிருந்து வந்தவன், நேரே தன்னை அனுப்பிய தேவர்களிடம் போய், ''நான் அவளிடம் நீங்கள் சொன்னபடி பேசினேன். ஆனால், அவள் ஒப்புக்

கொள்ளமாட்டேன் என்று சொல்லிவிட்டாள். அதனால் நீங்கள் என்ன செய்ய முடியுமோ செய்துகொள்ளுங்கள். இதுதான் நடந்த உண்மை'' என்றான்.

### துணைக்கு வந்த சரஸ்வதி!

அன்றைக்கு ராத்திரியே அவர்கள் தீர்மானம் பண்ணினார்கள். நான்கு பேரும் நளனை மாதிரி மானிட ரூபத்தில் சுயம்வரத்துக்குப் போனார்கள். இப்போது ஐந்து நளன்கள் அங்கே! ஐந்து பேரில் யார் ஒருவரை தமயந்தி தேர்ந்தெடுத்தாலும் இந்த நால்வருக்குள் ஒருவருக்கே வெற்றி வாய்ப்பு அதிகம்! இப்படி ஒரு கணக்கைப் போட்டுவிட்டு நான்கு பேரும் போய் உட்கார, நளனும் போய் உட்கார, அப்போதுதான் தமயந்தி சிக்கலில் மாட்டிக் கொண்டாள். ''அம்மா! என்ன செய்வது?'' என்று காத்யாயனி தேவியிடம் வேண்டினாள்.

அந்தக் காலத்தில் பெண்கள் திருமணத்துக்கு முன்னால் காத்யாயனி தேவியை வணங்குவது வழக்கம். காத்யாயனியாக இருக்கக்கூடிய அம்பிகை பரமேஸ்வரி, தமயந்திக்குத் துணையாக சரஸ்வதியை - வாக்குக்கு அதிபதியாக இருக்கக்கூடிய சரஸ்வதியை - அனுப்பி வைத்தாள். அந்த சரஸ்வதி, தமயந்தியின் தோழிப் பெண் மீது ஆவாஹனம் ஆனாள்.

வரிசையாக உட்கார்ந்திருந்த ஐந்து நளன்களையும் வெளியிலிருந்து பார்க்கிறபோதே நைடத நாட்டு நளன் யார் என்பதைச் சிலேடையாகச் சொல்கிறாள் தோழிப் பெண். அவள் சொல்லிக் கொண்டே போகிறபோது, தமயந்தி ஐந்து பேருடைய கண்களையும் உற்றுப் பார்த்தாள். நான்கு பேருடைய கண்கள் இமைக்காமலே இருந்தன. அவர்கள் தேவர்கள் என்பது புரிந்தது. இமைக்கும் கண்களையுடைய நளனே நைடத நாட்டு மன்னன் என்று முடிவுக்கு வந்தாள்.

தேவர்களுக்குச் சாதாரணமாகக் கண்கள் இமைக்க மாட்டா. ஆனால், இங்கே அம்பாளைக் குறித்து என்ன நாமாவளி என்றால், அவள் கண்களை இமைத்தால் இருட்டு; கண் மலர்ந்தால் அது வெளிச்சம் - **உன்மேஷ நிமிஷ உத்பன்ன விபன்ன புவனாவளி.**

இதை ஆசார்யர் ஆதிசங்கரர் அப்படியே எடுத்துக்கொண்டு, 'அம்மா உன் கண்கள் இமைப்பதே இல்லை' என்று பாடினார். 'நீ ஏன் இமைக்காமல் இருக்கிறாய் என்பதற்கான காரணம் எனக்குத் தெரியும். நீ கண் இமைத்தால் அது அஸ்தமனம்; விழி மலர்ந்தால் அது உதயம். - உலகத்தில் இருக்கக்கூடிய சாதுக்கள் சொல்லியிருக்கிறார்கள் இதை. எங்களுக்கு இருட்டே வந்துவிடக் கூடாது என்பதற்காக நீ கண்களை இமைக்காமலே இருக்கிறாயே தாயே!' என்று பாடினார்.

அம்பாள் **சலன்மீனாபலோசனி** - அவளுடைய விழிகள் ஓயாமல் அலை பாயும் மீன் விழிகள். ஆனால், மீனாக்ஷி என்கிற திருநாமம் ஸ்ரீலலிதா சஹஸ்ர நாமத்தில் கிடையாது. சலன்மீனாபலோசனா என்பதைத்தான் ஆசார்யர் ஆதிசங்கரர் அடிப்படையாக வைத்துக்கொண்டு செளந்தர்ய லஹரியில் பாடுகிறார்.

மீனாக்ஷி என்கிற திருநாமச் சிறப்பு குறித்து மேலும் பார்ப்போம்.

**(வளரும்)**

**அந்தக் காலத்தில் பெண்கள் திருமணத்துக்கு முன்னால் காத்யாயனி தேவியை வணங்குவது வழக்கம்**

# என்னதான் நடக்கிறது ஈழத்தில்?




புலிகளின் தலைவர் பிரபாகரன் குண்டு வீச்சில் காயம்பட்டு இருக்கிறார் என்ற தகவல்கள் தற்போது உலா வர, சமீபத்தில் ஒரு கருத்தரங்குக்கு இலங்கை சென்று வந்த தடயவியல் விஞ்ஞானி டாக்டர் சந்திர சேகரைச் சந்தித்தோம்.

'ஜனநாயக அமைப்பில் தேர்ந்தெடுக் கப்பட்ட அரசுகள் பயங்கரவாதத்தால் சந்திக்கும் சவால்கள்' என்ற தலைப்பில் கொழும்புவிலுள்ள கதிர்காமர் சர்வதேச அமைப்பு ஒரு கருத்தரங்கை நடத்தியது. உலகெங்கிலும் இருந்து நீதிபதிகள், ஓய்வு பெற்ற இராணுவ அதிகாரிகள், கல்வி யாளர்கள் மற்றும் பத்திரிகையாளர்கள் அழைக்கப்பட்டிருந்தார்கள். இந்தியா விலிருந்து நானும், ஓய்வுபெற்ற இராணுவத் தளபதி மாலிக்கும் கலந்து கொண்டோம். பயங்கரவாதம் உருவாகும் விதம், அதன் சூழல்கள், சவால்களைச் சந்திக்க புதிய சிந்தனைகள் என்று இரண்டு நாட்கள் மாநாடு நடந்தது. மாநாடு முடியும் தறுவாயில் இலங்கை வெளியுறவுத் துறை அதிகாரி ஒருவர், ''நாளை காலை, உங்களை கிழக்குப் பகுதிக்கு அழைத்துப் போகவிருக்கிறோம்'' என்று கூறி பட படப்பைக் கூட்டினார்.

மறுநாள் காலை. கொழும்புவிலுள்ள இராணுவ விமான நிலையத்துக்குச் சென் றோம். நாற்பது நிமிடங்களுக்குப் பிறகு பட்டிகோலா எனப்படும் மட்டக்களப் பில் இறங்கினோம். அங்கிருந்து எங்களை வேறொரு ஹெலிகாப்டருக்கு மாற்றினார் கள். ஹெலிகாப்டரின் பின்பகுதி முழு வதும் மூடப்படாமல், வலைபோன்று போட்டிருந்தார்கள். எங்கு நோக்கினும்,

* மீனவர்களைச் சந்தித்தபோது...

நவீன ரக துப்பாக்கிகளுடனும், கூடுதல் உஷாருடனும் சிங்களப் படைகள்.

மட்டக்களப்பின் புறநகர்ப் பகுதி முழுவதையும் சிங்களப் படையிடமிருந்து கைப்பற்றி புலிகள் ஆட்சிசெய்து வந்தனர். பின்னர் சிங்கள அரசு அவர்களுடன் போரிட்டு மீட்டது. இப்போது தமிழர்களுக்குச் சமமாக சிங்களவர்களைக் குடியேற்றும் வேலைகள் நடந்துவருகின்றன. தொடர்ந்து மோதல்களைச் சந்தித்து வந்ததால், அந்தப் பகுதி முழுவதும் இடிந்த வீடுகள், சிதைந்த கோயில்கள், சர்ச்சுகள் மற்றும் உடைக்கப்பட்ட பாலங்கள்தான். ஆங்காங்கே சிறுசிறு கடைகள். மினி வேன்களில் சிங்களப் படையினரின் கண்காணிப்புடன் போக்குவரத்து. பெரும்பாலும் டிராக்டர்களே போக்குவரத்துக்குப் பயன்படுத்தப் படுகின்றன. அரிசி, மண்ணெண்ணெய் எடுத்துச்செல்லும் வாகனங்களுக்குக் கூடுதல் பாதுகாப்பு. அங்குள்ள தமிழ் மக்கள் சந்திப்பது நிலப் பிரச்னை. நில உரிமை தொடர்பான ஆவணங்கள் போர்களில் அழிக்கப்பட்டதால், தமிழர்கள் தங்கள் வீடுகள் இருந்த நில உரிமை குறித்து நிரூபிக்க மிகச் சிரமப்படுகிறார்கள். தற்காலிகமாக தகரம், கீற்றுகள் வேய்ந்த சிறு கொட்டகைகளில் வசிக்கிறார்கள்.


★ சந்திரசேகர்

பள்ளிகள் பெயர் அளவில் இயங்கினாலும் குழந்தைகளைப் பள்ளிகளுக்கு அனுப்புவதில், பெற்றோர்கள் தயக்கம் காட்டுகிறார்கள். வழியில் எங்காவது கண்ணிவெடியிலோ அல்லது மோதல்கள் நடுவிலோ குழந்தைகள் மாட்டிக்கொள்வார்களோ என்ற பயம்தான். பள்ளிச் சிறுவர், சிறுமியர் கண்களில் 'நாளைய நம்பிக்கையைவிட 'இன்றைய பயமே' இடம் பெற்றிருக்கிறது.

இராணுவ டிரக்கில் வாக்கரை என்ற மீனவக் கிராமத்துக்குச் சென்றோம். போகும் வழிகளில் சிங்களவர்களைக் குடியேற்றும் முகமாக ஏற்பாடுகள் நடந்துகொண்டிருப்பதைப் பார்க்க முடிந்தது. ''கடலிலும் அமைதியாக எங்களால் மீன்பிடிக்க முடியவில்லை. தட்பவெப்ப நிலை காரணமாகப் பல நாட்கள் மீன் பிடிக்கவும் போக முடியாது. கொஞ்சம் விவசாய நிலம் இருக்கிறது. அங்கு விவசாயம் செய்யலாம் என்றால், இராணுவம் அனுமதி மறுக்கிறது. மேலும், வடக்கிலிருந்து கிழக்கு நோக்கி வரும் ஆற்றையும் மறித்துவிட்டார்கள்'' என்றார் ஒரு மீனவர். இதை இராணுவ அதிகாரிகளிடம் மொழி பெயர்த்தபோது, ''நிலங்களில் கண்ணிவெடிகள் இருக்கின்றன. அவை நீக்கப்பட்ட பிறகு அனுமதிப்போம்'' என்றனர். வாக்கரைப் பகுதி சிங்களப் படைகளால் தாக்கப்பட்டபோது, நூற்றுக்கணக்கான அப்பாவித் தமிழர்கள் கொல்லப்பட்டிருக்கின்றனர். அந்தப் பகுதிகளில் தமிழர் - சிங்களர் கலப்புத் திருமணங்களின் காரணமாக, புது கலாசாரம் உருவாகி வருவதையும் பார்க்க முடிந்தது. அந்தப் பகுதியிலிருந்து திரும்பும்போது இருட்டிவிட்டது. நாங்கள் சென்ற வான்வழி நெடுக கீழே இருக்கும் பாதுகாப்புப் படைகள் க்ளியர் செய்தார்கள். திடீரென்று வானத்தில் கலர்கலராக மத்தாப்பு; பயந்து போய்விட்டோம். விமானத்துக்கு சிக்னலாம் அது. இரவு கொழும்பில் தங்கினோம். மறுநாள் காலை பத்திரிகைகளைப் பிரித்தால், விமானப்புலிகள் அநுராதபுரம் இராணுவத் தளத்தைத் தாக்கியது குறித்து பரபரப்பான செய்தி வெளியாகியிருந்தது. அதிர்ந்து போனோம்.''

## தொடரும் துயரம்!

– ப்ரியன்

# சிக்கென்று இருக்க...

## ஸ்லிம் யோசனைகள்

இன்றைய இளம் பெண்களுக்கு ஸ்லிம்மாக இருக்க ஆசையாகத்தான் இருக்கிறது. ஆனால், உடலை ஸ்லிம்மாக வைத்திருக்கும் வழிகள்தான் தெரிவதில்லை. அதிக உடல் எடையுடன் இருப்பவர்களுக்கு முறையான பயிற்சிகள் அளித்து, ஸ்லிம்மாக மாற்றிக் காட்டுகிறார் சென்னை தி.நகரில் 'ஸ்லிம் அண்ட் கேர்' நிறுவனத்தை நடத்திவரும் ரிஷிதா.



* ரிஷிதா

''இன்றைய சூழலில் ஆண்களுக்கு இணையாகப் பெண்களும் சம்பாதிக்கிறார்கள். வேலைப் பளு காரணமாக, சரியான விகிதத்தில் உணவு எடுத்துக்கொள்ளாதது, உடல் நலத்தில் அக்கறையில்லாமல் உழைப்பது போன்ற காரணங்களால், உடல் எடை பெரும்பான்மையாக அதிகமாகிறது. இதைத் தவிர பரம்பரை, ஹார்மோன் குறைபாடுகள் போன்றவற்றாலும் மனரீதியாக ஏற்படும் டென்ஷன், பயம் போன்ற காரணங்களாலும் உடல் எடை அதிகரிக்கிறது.

'எடையைக் குறைக்கின்றேன்' என்று நிறைய பெண்கள் பட்டினி கிடக்கிறார்கள். அவர்களின் உணவுப் பழக்கங்களில் மாற்றங்களைச் செய்து, அதைப் பின்பற்றினாலே போதும்.

உடலின் எடையைக் குறைக்க இத்தாலியிலிருந்து தருவிக்கப்பட்ட Airware கருவி இருக்கின்றது. இந்தக் கருவியைப் பயன்படுத்தினால் வழக்கமான பயிற்சிகளோடு, தினசரி ஒரு மணி நேரம் ஜாக்கிங் செய்தால் என்ன பலன் கிடைக்குமோ அந்த அளவுக்கான பலன் கிடைக்கிறது.

முதலில் நம்முடைய உடல் எடை குறையும் என்பதை முழுமையாக நம்ப வேண்டும். உடல் பருமனாக இருக்கும் பெண்கள் அலுவலகம், படிக்கும் இடம், குடும்பம் எனப் பல்வேறு இடங்களில் கிண்டலுக்கும், ஏளனப் பேச்சுக்கும் ஆளாகி உள்ளார்கள். இவர்கள் கவுன்சிலிங் வகுப்பில் கலந்துகொண்டு பலன் பெறலாம்.

சிலருக்குக் கழுத்துப் பகுதியில் அதிகப்படியாகச் சதை தொங்குகிறது. இதற்கு 'டபுள் சின்' என்று பெயர். ஃபேஸ் லிஃப்ட் என்ற சிகிச்சையின் மூலமாக தொங்கிக் கொண்டிருக்கும் சதையை உறுதிபெறச் செய்யலாம். கரு வளையங்கள் மறையும். முகம் புத்துணர்வுடன் காணப்படும்.

இள வயதினருக்கு மட்டுமல்ல, வயதானவர்களுக்கும் பயிற்சிகள் இருக்கின்றன. சமீபத்தில் அறுபத்தியெட்டு வயதுப் பெண்மணி மிக அதிக எடையுடன், நடக்க முடியாமல் சிரமப்பட்டு என்னிடம் வந்தார். அந்தப் பெண்மணியின் பிள்ளைகள் அவருடன் இல்லை. தனியாக வசித்து வருபவர். தன்னுடைய அன்றாடப் பணிகளைச் செய்துகொள்வதற்குக்கூட மிகவும் கஷ்டப்பட்டிருக்கிறார். எங்களின் பயிற்சியை அவருக்குக் கற்றுத் தந்தோம். படிப்படியாகச் சில மாதங்களில் எடை குறைந்து நார்மலாகிவிட்டார். தற்சமயம் அவரின் அன்றாடப் பணிகளைத் தாமே செய்து கொள்கிறார்'' என்கிறார் ரிஷிதா.

– ராகவ்குமார்

கலைஞர் டி.வி.யில் ஒளிபரப்பாகும் 'வைரநெஞ்சம்' தொடர் மக்கள் மனத்திலும் டி.ஆர்.பி. ரேட்டிங்கிலும் நல்ல இடத்தைப் பிடித்திருக்கிறது. நெசப்பாக்கத்தில் நடைபெற்ற படப்பிடிப்பு இடைவேளையில் 'வைரநெஞ்சம்' குழுவினரைச் சந்தித்தோம்.

''டி.வி. சீரியல்னாலே பெண்கள் அழுதுக்கிட்டுத்தான் வரணுமா. 'ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே' என்று பழமொழி உண்டு. என்னுடைய வைரநெஞ்சம் 'சக்தி' தன்னுடைய கணவனுக்காக அழுது தீர்ப்பவள் அல்ல; தன் கணவனை நல்ல மனிதனாக ஆக்கி முடிப்பவள். 'மற்ற சீரியல்களிலெல்லாம் திரை நட்சத்திரங்கள் நடிக்கிறார்களே? நமது சீரியலில் அப்படி யாரும் இல்லையே' என்று கேட்டதற்கு, 'நல்ல கதையும், அதைக் கொண்டு சேர்ப்பதற்குச் சிறந்த திரைக்கதையும் இருந்தால்போதும். சீரியல் கண்டிப்பாக வெற்றி பெறும் என்று தயாரிப்பாளர் ஏவி.எம். சரவணன் உற்சாகமூட்டினார். அவருடைய உற்சாக



# ''அழுதுக்கிட்டே



மான அணுகுமுறையே என்னை நித்தம் இயக்குகிறது'' என்கிறார் வைரநெஞ்சத்தின் கதை, திரைக்கதை, வசனம் எழுதும் சேக்கிழார்.

''இன்றைய நடுத்தரக் குடும்பத்துப் பெண்கள் நன்றாகப் படிக்கிறார்கள். நிறைய சம்பாதிக்கிறார்கள். குடும்பத்தில் மாமியார், நாத்தனாரோடு பிரச்னை என்றால் கண்ணைக் கசக்கிக் கொண்டிருப்பதில்லை. குட்டக்குட்டக் குனிந்ததெல்லாம் அந்தக் காலம். குட்டினால் எழுந்து நின்று போராடுவது இந்தக் காலம். பெண்தான் குடும்ப இயக்கத்துக்கு முக்கிய சக்தி.

அதனால்தான் வைரநெஞ்சம் கதாநாயகி கேரக்டருக்குக்கூட சக்தி என்று பெயர் வைத்துள்ளேன். சினிமாவில் இடைவேளையின்போது சஸ்பென்ஸ் இருந்தால் போதும். சீரியலில் ஒவ்வொரு நாளும் சஸ்பென்ஸ் வைத்து முடிக்கவேண்டும். மேலும், இருபத்தைந்து நிமிட சீரியலில், இரண்டு விளம்பர இடைவேளைகள் வருகின்றன. இந்த இடைவேளையில்கூட சிறு சஸ்பென்ஸ் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் ஆடியன்ஸ் வேறு சேனலுக்கு மாறிவிடுவார்கள்.

சீரியலில் வரும் காட்சிகள் என்பது நமது வீட்டில் ஜன்னலிலிருந்து பார்த்தால், பக்கத்து வீட்டில் நாம் பார்க்கும் விஷயங்களைப் போல இருக்கவேண்டும் என்பது என் எண்ணம்'' என்று சேக்கிழார் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, கதாநாயகி மீனாகுமாரி அருகே வந்து அமர்ந்தார். வசனகர்த்தாவுக்குக் கொஞ்சம் ரெஸ்ட் கொடுத்துவிட்டு ஹீரோயினிடம் திரும்பினோம்.

என்றவரை இடைமறித்து உள்ளே நுழைந்தார் ஹீரோ விஷ்வா. ''இதுவரை எண்பத்தியொரு சீரியல்களில் நடித்து விட்டேன். அந்த சீரியல்களெல்லாம் எனக்கு அளித்த பெயரைவிட வைரநெஞ்சம் அதிகமாகப் புகழை அளித்திருக்கிறது'' என்று சிம்பிளாக முடித்துக்கொண்டார்.

''இயக்குநர் கதிர் இயக்கிய பல்வேறு படங்களுக்கு உதவி இயக்குநராகப் பணியாற்றி உள்ளேன். ஏற்கெனவே ஏவி.எம். தயாரித்த 'பெண்ணின் கதை'க்கு இணை இயக்குநராகப் பணியாற்றினேன். அந்த



# இருக்கணும்னு ஆசையா?''

''என்ன மேடம், எல்லா சீரியல்களிலேயும் அழுவீங்க... இதுல ரொம்பத் தைரியமான பொண்ணா வர்றீங்களே?''

''எனக்கு மட்டும் எப்போதும் அழுதுகிட்டே இருக்கணும்ன்னு ஆசையா என்ன? முன்னாடி நடிச்ச சீரியல் எல்லாம் அப்படி எனக்கு அமைந்துவிட்டது. சீரியலிலிருந்து முற்றிலும் மாறுபட்ட கேரக்டர் வைரநெஞ்சத்தில். இப்போதெல்லாம் நான் எங்கு வெளியில் சென்றாலும் ரசிகர்கள் 'சக்தி' என்றுதான் என்னை அழைத்துப் பேசுகிறார்கள். இது என்னுடைய கேரக்டருக்கும், வைரநெஞ்சம் சீரியலுக்கும் கிடைத்த வெற்றியாகக் கருதுகிறேன்''

நம்பிக்கையில்தான் 'வைரநெஞ்சம்' இயக்கும் வாய்ப்பை ஏவி.எம்.சரவணன் எனக்கு அளித்தார். சேக்கிழாரின் தெளிவான திரைக்கதையும், சிறந்த வசனங்களும்தான் இந்த சீரியல் முதலிடத்தில் இருப்பதற்கு முக்கிய காரணமெனக் கருதுகிறேன். கரி போன்று இருக்கும் கதாநாயகனை வைரம் போன்று மாற்றிக்காட்டுகிறாள் கதாநாயகி. அதனால்தான் வைரநெஞ்சம் என்று சீரியலுக்குப் பெயர் வைத்தோம். ரேட்டிங்கிலும் நல்ல இடத்தில் இருக்கிறது'' என்கிறார் இயக்குநர் ஆர்.கே.

– ராகவ்குமார்

# பழகிய பட்டுச் சேலை!

* ரஞ்சனி ஹெப்பார்

படம் : ஸ்ரீஹரி

சமர்த்தாக ஹோம் வொர்க் செய்துவிட்டு ஸ்கூலுக்கு வரும் மாணவியின் முழுமையும் கட்டுப்பாடும் தெரிந்தன ரஞ்சனி ஹெப்பார் பாடிய போது. வர்ணத்தை மூன்று காலங்களில் படிப்படியாக வேகம் கூட்டியபோதும், கல்யாணி ராகத்தின் குழைவுகள் கலைந்து விடாமல் நேர்த்தியாகப் பிரகாசித்தன. ஹேமவதியில் தீஷிதர் கீர்த்தனை - 'ஹரியுவதீம் ஹைமவதி' - அளவான கற்பனை ஸ்வரங்களால் நரஹரி ஹ்ருதய நிவாஸினியை அர்ச்சித்துவிட்டு, ஸாவேரி ராக ஆலாபனையை ரஞ்சனி எடுத்துக்கொள்ள, நிகழ்ச்சி நன்கு நங்கூரம் பாய்ச்சப்பட்டு நின்றது. ஸாவேரியின் உருக்கமும் கனத்த அழகும் பெரியசாமி தூரனின் (அவருடைய நூற்றாண்டு இது) 'முருகா முருகா' என்றால், கீர்த்தனைக்கான உணர்வுத் தளத்துக்குக் கம்பளம் விரிக்க, கௌசிக் சிவராம கிருஷ்ணன் வயலினில் எதிரொலித்த ஸாவேரி அதைச் சுற்றிக் கோலமிட, ரஞ்சனி கீர்த்தனையைப் பாடியபோது முருகனே மனமுருகி வந்து ஸாவேரி மண்டபத்தில் அமர்ந்தது போல்தான் இருந்தது.

இதே மிகையற்ற பாவமும் உணர்வுத் துல்லியமும் காம்போதியிலும் தொடர்ந்து வெளிப்பட்டன. ஸ்ரீராமரிடம் தியாகராஜர் கோபித்துக் கொள்ளும் (செல்லமாகத்தான்) தொனியை 'எவரிமாட' கீர்த்தனையில் வெளிப்படுத்திய ரஞ்சனி, நிரவல் ஸ்வரங்களிலும் அந்த உணர்வு மாறிவிடாமல் காத்தது அவருடைய முதிர்ச்சியைக் காட்டியது.

அன்று மேடையில் இருந்த மூன்று கலைஞர்களுமே (மிருதங்கம் தஞ்சாவூர் கே.பிரவீன்குமார்) நேர நிர்வாகத்தில் சளைக்காமல் தங்கள் திறமைகளை ஆத்மார்த்தமாக வெளிப்படுத்தியதில், ஒன்றரை மணி நேரக் கச்சேரியில் மூன்று மணி நேர நிறைவு கிட்டியது. நிரவல் - ஸ்வரங்களுக்கும் குரல் - வயலினுக்கும் தகுந்த வேறுபாடு கொடுத்த பிரவீன் குமாரின் வாசிப்பு ஒத்துழைப்புக்கு நல்லுதாரணம்.

பழகிய பட்டுச் சேலைபோல் தம்பூரா (அசல் தம்பூராதான்!) சுருதியுடன் இழைந்து வெளிப்படும் ரஞ்சனியின் குரல், மேல் ஸ்தாயிகளில் இன்னும் 'திறந்து பாட' மேலும் கனமும் நயமும் பெற முடியும்.

# நேர்மையான அணுகுமுறை

பாற்கடலில் மந்தர மலையை இட்டு, வாஸுகியை நாணாக்கிக் கடையும் காட்சி... அமுதக் கலசத்துடன் வெளிப்படும் மஹாலக்ஷ்மி, மஹாவிஷ்ணுவின் மார்பில் சென்று அமர்கிறாள் - நாட்டியத்துக்கும் பாவத்துக்கும் இடமளிக்கும் இந்தக் கட்டத்தை 'தேவி கிருபா லஹரி' நாட்டிய நிகழ்ச்சியில் திறம்பட அமைத்திருந்தார் ரேவதி ராமச்சந்திரன்.

அம்பாளின் கருணை அலைகள் என்பது நிகழ்ச்சித் தலைப்பு உணர்த்தும் பொருள். துர்கா-லக்ஷ்மி-சரஸ்வதி அம்சங்களின் சிறப்புகளைச் சொல்லும் விதமாக உருவாக்கப்பட்டிருந்த இப்படைப்பில் ரேவதி ராமச்சந்திரனுடன் அவரது மாணவிகளான மனஸ்வினியும், ஸ்ரீதாரிணி ஸ்ரீதரனும் ஆடினர்.

காட்சி அமைப்பு, ஒளி அமைப்பு போன்றவற்றுக்கு மிகையான முக்கியத்துவம் தராமல், நிருத்தியத்தையும் பாவத்தையும் கொண்டே நிகழ்ச்சியைப் பின்ன முயன்ற நேர்மையான அணுகுமுறை இதமாக இருந்தது. எனினும், கதைசார்ந்த கற்பனைக்கு இடமளிக்காமல், தத்துவார்த்த விளக்க வரியை (அகார, உகார, மகார) ஆரம்பப் பகுதியிலேயே அமைத்ததில் நிகழ்ச்சியின் முற்பகுதி தொய்வுற்றதைத் தவிர்க்க முடியவில்லை.

அங்கே ஒரு சுலோகம், இங்கே ஒரு கவிதை என்று தேர்வு செய்து, அவற்றுடன் தற்கால வாக்கேயக்காரர்கள் (எம்.பாலமுரளிகிருஷ்ணா, டி.கே.கோவிந்த ராவ்) போன்றோரின் பாடல்களையும் இணைத்துத் தொகுக்க எடுத்துக்கொண்ட முயற்சி பூரண அமைப்புக்குக் கைகொடுக்கவில்லை. நட்டுவாங்கம் பலமாக இருந்தபோதும் பாட்டு சுமார் ரகம்தான்.



இந்தக் குறைபாடுகளை மீறி ஒன்றரை மணி நேர நிகழ்ச்சியைப் பரிமளிக்கச் செய்தது ரேவதி ராமச்சந்திரன் அமைத்திருந்த நிருத்யம். மேடையை முழுமையாகப் பயன்படுத்தி அமைக்கப்பட்டிருந்த ஜதிக் கோர்வைகள்; மூவரும் சேர்ந்து ஆடியபோது கையாண்ட எதிரும் புதிருமான நிருத்திய நிலைகள்; முன்னும் பின்னுமான தொடர் கோர்வைகள் என்று குழு நடன அமைப்புக்கான சிறப்பாற்றல் பளிச்சிட்ட வண்ணமிருந்தது.



படம் : யோகா

* ரேவதி ராமச்சந்திரன்

ஸ்ரீதாரிணியின் நடனத்தில் தெரிந்த துல்லியம், அங்க சுத்தம், ஹ்ருதய பாவம் அவரைத் தனித்தன்மையுள்ள கலைஞராக அடையாளப்படுத்தின.

மனஸ்வினியின் தயக்கம் ஒத்திகைகள் போதவில்லை என்பதைக் காட்டிக் கொடுத்தது.

தும்புரு

([illegible] 21.12.2007)



# மாடர்ன் டிரஸ்

● என்.கோமதி, நெல்லை

**கோடிட்ட இடத்தை நிரப்புக... கிரேஸியின் வீட்டுக்........ ஜோக் சொல்லும்?**

கம்பன் வீட்டில் கட்டுத் தறி; கிரேஸி வீட்டில் WIT டுத் தறி.

● எஸ்.கே.வாலி, துறையூர்

***திருக்குறளை மேற்கோள் காட்டி எழுதுவதுண்டா...?***

"சம்பந்தம் இருக்கோ இல்லையோ, நீ எழுதும் நாடக, சினிமா வசனங்களில் ஏதேனும் ஓர் இடத்திலாவது திருக்குறளைத் தவறாமல் கூறு" என்று, தனது தேக அசௌகரியத்தையும் பொருட்படுத்தாமல், என்னிடம் வள்ளுவருக்காக வக்காலத்து வாங்கினார், மறைந்த எங்கள் குடும்ப நண்பர் 'மௌலீஸ்' ராமபத்ரன். அப்போதுதான் கமலஹாசன் அவர்களிடமிருந்து 'அபூர்வ சகோதரர்கள்' படத்துக்கு வசனம் எழுதும் வாய்ப்பு வந்தது. 'திருக்குறளும் என்னை மாதிரி தம்மாத்தூண்டு தான்... ஆனா அதுல எவ்வளவு விஷயம் இருக்கு தெரியுமா...?' என்று 'அப்பு' கமலுக்காக நான் எழுதிய முதல் வசனத்திலேயே, என்னையும் அறியாமல், ராமபத்திரனின் குறள் விருப்பம் நிறைவேறியது. கமல் வசனத்தைப் படித்துவிட்டுத் திருப்தியாகி வெகுவாக வாழ்த்தினார். வானுலகில் வள்ளுவரோடு வாழும் அமரர் ராமபத்திரனை நான் நன்றியோடு வணங்கினேன். அன்றிலிருந்து சினிமா, நாடகங்களில் "அவன் முதுகுல ரெண்டு அடி போட்டு அனுப்புங்க' என்று வில்லன் பேசும் வசனம் எழுத வேண்டி வந்தால் கூட, அதை 'அவன் முதுகுல திருக்குறளைவிட அரை அடி கூடுதலா போட்டு அனுப்புங்க' என்று எழுதும் அளவுக்கு, என் வசனத்துப் பால் குறள் சென்டிமெண்ட் காமத்துப் பாலாய்க் குடியேறியது.

● அ.யாழினி பர்வதம், சென்னை

***'தாய் சொல்லைத் தட்டாதே' என்கிறார்கள்... அதே சமயம் 'மனைவி சொல்லே மந்திரம்' என்றும் சொல்கிறார்கள். ஆண்கள் யார் பேச்சைக் கேட்பது...?***

அவர்களுடைய 'தாய் சொல்லைத் தட்டாமலும்', அதே சமயத்தில் 'தன் மனைவி சொல்லே மந்திரம்' என்று இருக்கும், அவர்களின் தாயின் கணவராம், 'தந்தை



**கிரேஸியைக் கேளுங்கள்...**

# தாவணி

## என்ன வித்தியாசம்?

சொல் மிக்க மந்திரமில்லை' என்று அன்றே சொன்ன 'பாட்டி சொல்லைத் தட்டாதே.'

● **ஏ.எஸ்.யோகானந்தம், ஔவையார்பாளையம்**

***தாவணிக்கும் - மாடர்ன் டிரஸ்ஸுக்கும் என்ன வித்தியாசம்...?***

வேறென்னங்க... விலைதான் வித்தியாசம்.

● **த. சத்தியநாராயணன், அயன்புரம்**

***வரப்போகும் புத்தாண்டை எப்படி வரவேற்பீர்கள்...?***

'நண்பா புத்தாண்டை வரவேற்க இதோ ஒரு வெண்பா' என்று எஸ்.எம்.எஸ்ஸில் என் தோழன் இரவி அனுப்பிய கவிதை இதோ...

*''அன்புநெய் ஊற்றி, அறிவுச் சுடரேற்றி*
*துன்ப இருளைத் துரத்திவிடு - இன்பநிலை*
*ஆழ்த்தி அருள்கூட்டும் புன்னகையால்*
*புத்தாண்டை*
*வாழ்த்தி வரவேற்போம் வா''...*

● **சாமிநாதன், மதுரை**

***நகைச்சுவையில் மெஸேஜ் இருக்க வேண்டுமா...?***

சிரி - சிந்தி என்பார்கள். என்னைப் பொறுத்த வரையில் சிரி; முடிந்தால் சிந்தி. முடியாவிட்டால் சிரி - மேலும் சிரி. எனக்குத் தெரிந்து, உலகம் முழுவதும் மெஸேஜ் தருபவர்கள் தபால்காரர்கள் மட்டுமே. நகைச்சுவையே ஒரு மெஸேஜ்தான். இன்னும் சொல்லப் போனால், மனச் சுளுக்கை எடுக்கும் மஸாஜ். மருத்துவரிடம் அப்பெண்டிஸைடிஸ், அல்சர் என்று போனால், அவர் ஆபரேஷன் செய்து குணப்படுத்துவதற்கு முன், வலி தெரியாமல் இருக்க, நமக்கு அனஸ்தீஸியா அதாவது மயக்க மருந்து கொடுப்பார். நகைச்சுவை, அனஸ்தீஸியா மாதிரி. பிரச்னைகளிலிருந்து விடுவித்து, சமுதாயத்தைக் குணப்படுத்தும் ஆபரேஷனைச் செய்யப் போகும் ராமகிருஷ்ண பரமஹம்சர், ரமண மகரிஷி, மகாகவி பாரதி, மகாத்மா காந்தி, மதர் தெரேஸா போன்ற டாக்டர்கள் அவதரிக்கும் வரையில், வலி தெரியாமல் சமுதாயத்தை வைத்துக்கொண்டிருக்க வேண்டியதுதான் நகைச்சுவையாளர்களின் பொறுப்பு. ●



ஆசிரியர் பக்கம்




# ஏழைப் பங்காளன்!



சிதம்பரத்தில் ஒரு மார்கழி மாதத்து மாலைப் பொழுது. நடராஜர் சன்னதி முன்பு நிறைந்திருக்கிறது கூட்டம். கோவிந்தராஜ பெருமாள் சன்னதி வாசல் வரை எள் போட்டால் எள் விழ இடமில்லை. ஆறரை மணி அளவில், நாயனம், பேரிகை, கொம்பு, முழவு, பறை என்று வாத்தியங்கள் முழங்க மாணிக்கவாசகர் வருகிறார். ஒரு கையில் ஜபமாலை, இன்னொன்றில் சுவடிகள் ஏந்தி, கண்களில் பரமானந்தம் தேக்கி வருகிறார். கூட்டம் வகிடெடுத்த மாதிரி அவர் பல்லக்குக்கு வழிவிட்டுப் பிரிகிறது. சித்சபேசனுக்கு நேரெதிரே ஆயக்கால் போட்டுப் பல்லக்கை நிறுத்துகிறார்கள். ஓதுவா மூர்த்தி ஒருவர் திருவெம்பாவை ஓத ஆரம்பிக்கிறார். எளிமையான மோகன ராகத்தில் யாரும் பின்பற்றிப் பாடக்கூடிய மெட்டு. கரடுமுரடாகவே ஒலித்தாலும் அந்தச் சன்னதியில் அத்தனை பேரும் மாணிக்கவாசகரே பாடுவதாகக் கருதி பக்தியுடன் சேர்ந்து இசைக்கிறார்கள். ஒவ்வொரு பாடலின் முடிவிலும் சிறு இடைவெளி - டணார் டணார் என்று இரண்டு பிரும்மாண்டமான மணிகளை யாரோ ஒலிக்கச்செய்து லயத்தை நிர்ணயிக்க, அவற்றுடன் வரிசையாகத் தொங்கும் கொத்து மணிகளின் ஓசை 'ஜல் ஜல்' என்று சேர, டன் டன் டன்; டண டன் டன் என்று மேளங்கள் பறைகள் முழங்க ஆரம்பிக்க, அந்தக் கணத்துக்காகவே காத்திருந்ததுபோல் பக்தர்கள் கூட்டத்தில் உள்ளவர்கள் தங்கள் ஜால்ராக்களை இசைக்கிறார்கள் - கையை, காலைக்கூட அசைக்க முடியாத அளவு நெரிசலில் எப்படியோ எல்லாம் நடக்கிறது! பெரிய பித்தளைத் தாம்பாள விட்டத்தில் தொடங்கி, சிறிய குழிக்கரண்டி வரையிலான அளவில் விதவிதமான ஜால்ராக்கள் விதவிதமான நாதங்களில் முழங்குகின்றன. நாதக் கனலாய் ஜொலிக்கும் நடராஜருக்கு நைவேத்யமும் தீபாராதனையும் நடக்கிறது. அந்தக் காட்சியை மாணிக்கவாசகர் தமது பல்லக்கில் நின்ற வண்ணம் கண்டுருகுகிறார். சுற்றிலும் எழும் பரவச ஒலிப் பிரவாகத்தின் அதிர்வுகள் அடங்கும் வரை, அவரது வெள்ளிப் பல்லக்கின் விதான விளிம்பில் தொங்கும் பச்சை மணிகள் அதிர்ந்து ஆடுகின்றன.

இப்படியே 21 பாடல்கள், 21 முறை நைவேத்யம், தீபாராதனை... ஒவ்வொரு இடைவெளியிலும் சளைக்காமல் பெருகும் ஜால்ரா ஓசை...! கடைசி தீபாராதனைக்குப் பிறகு மாணிக்கவாசகர் நடராஜர் சன்னதியை வலம்செய்து கொண்டு தம் இருப்பிடம் திரும்பிவிடுகிறார்.

மார்கழி மாதம் முடிய நடைபெறும் இந்த மாணிக்கவாசகர் தீபாராதனையின் போது, பெரும்பாலான பக்தர்களால் தாங்கள் நிற்கும் கோணத்திலிருந்து நடராஜரையும் பார்க்க முடிவதில்லை; மாணிக்கவாசகரையும் காண முடிவதில்லை! ஆன போதிலும், அங்கே கரைபுரளும் பக்தி திக்குமுக்காட வைக்கிறது. ''ஏழைப் பங்காளன்'' என்று ஈசனை மாணிக்கவாசகர் அழைத்துப் பாடியதன் அழகான அர்த்தம் முழுமையாகப் புரிகிறது!

A TRUST FOR YOUR LIFE

# திருநெல்வேலி

## "ஷிபா கோல்டன் சிட்டி"- யின்

### இரண்டாவது பகுதி II PHASE

குதூகல ஆரம்பம்

வாழ்வதற்க்கும்

பெருமை கொள்வதற்க்கும்

தனித்தனி பங்களாக்கள்

ரூ.14 லட்சத்திலிருந்து

- நீச்சல் குளம்
- கான்பரன்ஸ் ஹால்
- ஷாப்பிங் மால்
- சிறுவர் பூங்கா
- 24 மணி நேர தண்ணீர் வசதி
- 24 மணி நேர மின்சார வசதி
- 24 மணி நேர பாதுகாப்பு

இன்னும் எண்ணற்ற வசதிகள்





Conduct :
94431 25525
94425 25525
94437 25525

NEAR SHIFA HOSPITAL,
TIRUNELVELI, JUNCTION,
TAMILNADU - 627 001
PHONE NO: 0462-2333015
2335858
Web : www.shifahousing.com
Mail : info@shifahousing.com

Shifa
HOUSING (P) LTD
TIRUNELVELI

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.